# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# திருமலையில் தங்குவசதி விவரங்கள்

## ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயர்கள் | தட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள்) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள் (சிறிய... அறைத்தொகுதிகள்) | 50-00 |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | |
| (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொனறும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடில்கள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) | |
| (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் | |
| தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |

### டி.பி. குடில்கள்

| | |
|---|---|
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள் ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B | |
| (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C,D; ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவ்வொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாத்ரி நகர் குடில்(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சங்குமிட்டா குடில்கள்(எஸ்.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாத்ரிநகர் குடில்கள்(எஸ்.என்.சி.) ... | 15-00 |
| ஹில்வ்யூ குடில்கள் | |
| (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ. 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலத்தில் எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிக்கு, 30 நாட்களுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும்.)



ஏரார் மதுரகவி இவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையில் சித்திரைநாள் - பாருலகில்
மற்றுள்ள ஆழ்வார்கள் வந்துதித்த நாள்களிலும்
உற்றதெமக்கு என்று நெஞ்சே யோர்.

[சிறப்பு பொருந்திய மதுரகவியாழ்வார் இம்மாநிலத்தில் வந்து தோன்றப்பெற்ற சிறப்புடைய சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திர மானது, உலகில் பொய்கையாழ்வார் முதலான பத்து ஆழ்வார்கள் வந்து அவதரித்தருளின திருநட்சத்திரங்களைக் காட்டிலும், நமக்கு மிகவும் கொள்ளத்தக்கது என்பதை மனமே நீ அறிந்து கொள்வாயாக.]

--உபதேசரத்தினமாலை -25



# NAVAJEEVAN BLIND RELIEF CENTER (REGD.)

**(FREE H OME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503.

"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"

**வணக்கம்.**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர்-பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 19 வருடங்களாக அளித்துவரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 95 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறார்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வை யற்ற குழந்தைகளுக்கு தினந்தோறும் மூன்றுவேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒருநாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப்பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் எங்கள் ஆச்ரம வளா கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிசசலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G)

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்" ஸ்வாமி விவேகானந்தா.

தலைமை அலுவலகம் :
நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

நாராயண ஸேவையில்
K.S. ஆசார்யா
Founder / President

கிளைகள் : பத்ராசலம் (ஆ.பி.) வாரணஸி (உ.பி.)




"வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்

# மே - 1998

மலர் 28 இதழ் 12

தனிப்பிரதி ரூ. 4/- வருடச்சந்தா 48/-

சிறப்பாசிரியர் :

திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

* * *

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

* * *

துணை ஆசிரியர்:

திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,

* * *

அச்சிடுபவர்:

திரு. எம். லக்ஷ்மண் ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

* * *

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

உள்ளுறை — பக்கம்





அட்டைப்பட விளக்கம் :

முன் அட்டை : ஸ்ரீ அநுமான்- சித்திரம்: திரு. ஜெகதீஷ்

பின் அட்டை : ஸ்ரீ அன்னமாச்சாரியா - சித்திரம்: திரு. தத்து

## உங்களுடன்....

பழமை வாய்ந்த பாரதநாட்டின் பழம்பெரும் பண்பாட்டினைப் பேணிக்காப்பதில் பெரும் பங்கு வகிப்பது இந்து சமயமே எனில் அது மிகையாகாது. அவ் இந்து சமயத்திலே இருபெரும் கண்களாக சைவமும் வைணவமும் விளங்கி மட்டில்லாத் தொண்டினை உலக மக்களுக்கு நல்கி வருவதோடு, இவ் உலக வாழ்ச்சிக்குப் பொருளினையும், அவ் உலக வாழ்ச்சிக்கு அருளினையும் அளித்து ஆன்ம நேயத்திற்கு அடிகோலுகிறது என்றால் அது வியப்பாகாது.

சமயம் எப்படிப் பொருளினையும் அருளினையும் அளிக்க இயலும் என்று எண்ணத் தோன்றும். சமயம் புகட்டும் நல் அறிவினை சமயச் சிந்தனையாளர்கள் தம்முடைய ஆத்ம ஞானத்தால் மக்களுக்கு எடுத்தியம்புவதன் மூலம் மானிடன் . மாக்கள் தன்மையிலிருந்து விடுபட்டு மக்கள் தன்மையடைந்து நல்வழியில் இம்மைக்கு வேண்டிய பொருளினையும் மறுமைக்கு வேண்டிய அருளினையும் பெற ஏதுவாகிறது.

அவ்வகையிலே மிக உன்னதமான ஆன்மீக அறிவினை அனைவர்க்கும் போதிப் பவர்களாய் சமயச் சிந்தனையார்களாக இம்மண்ணில் அவதரித்தவர்களை ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள், நாயன்மார்கள், மெய்யடியார்கள், தாசர்கள், பாகவதர்கள் என்று வரிசைப் படுத்தலாம்.

வைணவ சமயச்சிந்தனையாளர்களில் தென்னிந்தியாவில் காலத்தை வென்ற மகான் பகவத் ராமாநுஜர். அவர் முக்காலத்தவரும் போற்றி வணங்குதற்குரிய மகாபுருஷர். அவ ருக்கு நிகர் அவரே எனும்படிக்கு தன்னை மனிதப்பிறவியினின்றும் உயர்த்திக்கொண்டு தெய்வநிலைக்கு மேலோங்கிச் சென்றவர் என்று கூறத் தட்டில்லை. மனிதகுலம் இருக்கும் வரைக்கும் என்றென்றும் அவர் புகழைப் பாடிப் பரவசமடைவதில் குறைவே இருக்காது. குறிப்பாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவரை ஒருநாளும் மறந்திலர் என்பதில் ஐயமில்லை.

ஆழ்வாரும் ஆச்சாரியருமாக திகழ்ந்த நம்மாழ்வாரால் "பவிஷ்யதாசாரியர்" என்று அவர் அவதரிப்பதற்கு முன்பே கொண்டாடப்பட்டவர். அதோடு அவர் பிறப்பால் 'கலி யும் கெடும் கண்டு கொண்மின்' என்று நெடுநோக்குடன் கூறிப்போந்தார் ஆழ்வார். மேலும் பொலிக! பொலிக! என்று அவர் இக்கலியுக வரவுக்கு வாழ்த்து கூறுவது போன்று திருவாய்மொழியில் பாசுரமிட்டுள்ளார் என்றால் பகவத் ராமாநுஜரின் பெருமைக்கு ஈடுண்டோ!

திருமகள் கேள்வனிடத்திலும் ஸ்ரீ வைஷ்ணவர்களிடத்திலும் ஆழ்ந்த ஆசையுடைய ராமாநுஜர் "விசிஷ்டாத்துவைதம்" எனும் கோட்பாட்டினை உருவாக்கி சமய சீர்த்திருத்த வாதியாகவும் விளங்கினார். முன்னோர்களால் ஓராண் வழியாக உபதேசிக்கப்பட்டு வந்த அருளிச்செயல், இரகசியங்களை "பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறு மென்று" அதாவது அறிந்துகொள்ள வேண்டும் எனும் ஆவல் உடையவர்களுக்கெல்லாம் உபதேசிக்க வேண்டி முன்பிருந்த வரம்பினை நீக்கினார். இதனால் இந்த ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தை உலகோர் அறிய 'எம்பெருமானார் தரிசனம்' என்று இதுக்கு திருவரங்கன் பேரிட்டு நாட்டி வைத்தாரன்றோ!

வைணவ சமயம் மேலும் தழைத்தோங்க திவ்ய சூரிகள் படைப்பான திவ்ய பிர பந்தங்களையும் எம்பெருமான் எழுந்தருளியுள்ள திவ்ய தேசங்களையும் இரு கண்களாக மதித்து, பொன்னே போல் காத்து பல இன்னல்களுக்கு இடையில் அரும்பாடுபட்டு வைஷ்ணவ தர்மத்தை காவிரிதொட்டு கங்கை வரை நிலைநாட்டினார்.

இம்மகாபுருஷர் பாணியில் ஆந்திராவில் அன்னமய்யா அவதரித்து அற்புதச் சீர்த்திருத் தங்களைச் செய்துள்ளார். வைணவம் வளர்வதற்காகக் கலியுக வரதனான அலர்மேல்மங்கை உறைமார்பனின் அருமைப்பெருமைகளைத் தன் கீர்த்தனைகளில் இசைத்து அவற்றின் மூலம் மண்ணுயிர்களை இன்புற வைத்துள்ளார். அதோடு அம்மகானின் சீர்த்திருத்தங்களைத் தம் கீர்த்தனையில் எடுத்தும் காட்டியுள்ளார்.

'கதுலன்னி கீலமைன கலியுக மந்துனு கதி யிதடே சூபெ கனகுருதைவமு' அதாவது கலியுகத்தில் கதியற்று கிடப்பவர்களுக்கு சிறந்த வழியினை காட்டும் குருவான கடவுள் ராமாநுஜர் என்று தம் கீர்த்தனையில் குறிப்பிட்டுள்ளார். இவற்றினைக் குறித்தே ராமாநுஜ ருக்கு தம்பியும், சீடருமான எம்பார் இவருக்கு முன்பே "எங்கள் கதியே! இராமாநுச முனியே! சங்கை கெடுத்தாண்ட தவராச!" என்று பலபடியாக அவரைக் குறித்து விளிப்பதை நாம் காணலாம்.

மேலும் அன்னமய்யா தன் கீர்த்தனையில் "ஈதனி கருணனேகா யில வைஷ்ணவுலமைதி மீதனி வல்லனே கண்டிமீ திருமணி யிதடேகா வுபதேஸ மிச்சேந அஷ்டாக்ஷரமந்த்ர மிதடே ராமாநுஜுலு இகபரதைவமு" அதாவது இவருடைய கருணையில்தான் வைணவர்களானோம் என்றும், திருமண் இடுகின்றோம் என்றும், இவர்தான் எட்டெழுத்து மந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' மந்திரத்தை உலகிற்கு உபதேசித்து இம்மைக்கும் மறுமைக்கும் தெய்வமாகிறார் என்றும் மிக அழகாக குறிப்பிட்டுள்ளார்.

இராமாநுஜர் தான் இயற்றிய நூலான வேதார்த்த ஸங்க்ரகத்தையும், வேதாந்தஸார தீபங்களையும், பங்குனி உத்திரத் திருநாளிலே ஸ்ரீரங்கநாயகியும் ஸ்ரீரங்கநாதனும் சேர்த் தியிலே பேரானந்தத்தோடு திருமஞ்சனம் கண்டருளியபின் அவர்களைச் சரணமடைந்து, அதை விளக்கும் கத்யத்ரயத்தையும் கருத்தில்கொண்டு அன்னமய்யா தன் கீர்த்தனையில் "வெலயிம்சே நீதடேகா வேதபுரஹஸ்யமுலு சலிமி நீதடே சூபெ சரணாகதி நிலிபிநா டிதடே கா நிஜமுத்ராதாரணமு மலசி ராமாநுஜுலே மாடலாடே தைவமு" அதாவது வேத ரகஸ்யங்களை வெளியிட்டவர் இவரே என்றும், ப்ரபத்தி நெறியான சரணாகதி மார்க்கத்தை உலகிற்கு காட்டியவர் இவரே என்றும், உண்மையான முத்ராதாரணத்தை நிலைநாட்டியவர் இவரே என்றும் இப்படிபட்ட ராமாநுஜரே பேசும் தெய்வம் என்கிறார். இதிலிருந்து பார்க்கும்பொழுது அன்னமய்யாவினுடைய வழிகாட்டி ராமாநுஜர் என்பது தெள்ளத்தெளிவாகிறதன்றோ!

இப்படியாக மெய்ஞ்ஞானத்தை புகட்டும் ஆச்சாரியர்களே சிறந்த குருவாவார்கள். அவர்களைச் சரணமடைந்து வணங்கினாலே போதும் வீடுபேறு அடைவது திண்ணம். எனவேதான் தனக்கு ஆச்சாரியரான நம்மாழ்வாரை அடிபணிந்து மதுரகவியாழ்வார் முக்தி யடைந்தார் என்பது யாவரும் அறிந்ததே. ஸ்ரீ பராசர பட்டரும் "அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ: ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே" அதாவது என்னுடைய ஆசார் யராய், ஞானம் முதலான குணங்கள் நிரம்பியவராய், கருணைக்கோர் கடலான அத்தகைய ராமாநுஜருடைய திருவடிகளை சரணமடைகிறேன் என்று தன்னுடைய ஆச்சாரியரிடத்தில் சரணாகதி செய்தார்.

சரணாகதி மார்க்கம்தான் முக்தி பெறுவதற்கு ஏற்ற வழி என்பதை வைணவப் பெரி யார்கள் காலம் காலமாக உணர்த்திவருகின்றனர். ஒரு ஆச்சாரியரைப் பற்றி அவர் மூலம் ப்ரபத்தி பண்ணி முக்தி பெறுவது வைணவ நெறியில் அதிமுக்கியமானதாகும். இந்த வகை யிலே சரணாகதி மார்க்கத்தைக் காட்டிய பகவத் ராமாநுஜருடைய திருவடித்தாமரைகளில் அடிபணிந்து முக்தி பெறுவோமாக.

# செய்திச்சுருக்கம்

## திருவேங்கடவன் கலைக் கல்லூரி பொன்விழா

திருப்பதியில் தி.தி. தேவஸ்தான மேலாண்மையின்கீழ் உள்ள திருவேங்கடவன் கலைக் கல்லூரி பொன்விழா 17-3-98 முதல் 18-3-98 வரை கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது.

திருப்பதியில் இக்கல்லூரியை நிறுவி 52 கல்வி ஆண்டுகள் ஆயின. இன்றைய ஆந்திரமாநில முதல்வர் திரு. என். சந்திரபாபு நாயுடு, பிரபல சினிமா பின்னணிப் பாடகர் திரு. எஸ்.பி. பாலசுப்பிரமணியம் போன்றவர்கள் பலர் இக் கல்லூரியின் பழைய மாணவர்கள். இங்கு படித்தவர்கள் பலர் அரசியல், சினிமாத்துறை மற்றும் அரசுகளில் உயர் பதவிகளை வகித்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

மூன்றுநாட்கள் நடந்த இப் பொன்விழாவில் முக்கிய விருந்தினராக சித்தூர் மாவட்ட ஆட்சியர் திரு. எஸ். நரசிங்காராவ், சினிமா கவிஞர் ஜாலாதி, தி.தி. தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்களும், சிறப்பு விருந்தினராக திரு. எஸ்.பி. பாலசுப்ரமணியம், தி.தி. தேவஸ்தானப் பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. எ. ராதாகிருஷ்ண ராஜு, வனத்துறை அலுவலர் திரு. வி. வெங்கடராமய்யா தேவஸ்தான இணைச்செயலாட்சித்தலைவர் திரு. டி. ராமகிருஷ்ணு, திருப்பதி சட்டமன்ற உறுப்பினர் திரு. ஏ. மோகன் பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. ஜி. மகாதேவ நாயுடு, தலைமைப் பொறியாளர் திரு. பி. முனிரெட்டி, சந்திரகிரி சட்டமன்ற உறுப்பினர் திரு. என். இராமமூர்த்தி நாயுடு, சித்தூர் பால்பண்ணைத் தலைவர் திரு. பி.என். இராஜசிம்ஹலு கலந்து கொண்டனர். போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு திரு. இ. பல்குணகுமார் பரிசுகள் வழங்கினார். 19-3-98 அன்று இவ்விழா முடிவடைந்தது.

## பத்மாவதி தாயாருக்கு அபயத்திருக்கை

அண்மையில் சென்னையைச் சேர்ந்த பிரபல தொழிலதிபர் ஒருவர் ஸ்ரீ பத்மாவதி தாயாருக்கு ரூபாய் 32 இலட்சம் மதிப்புள்ள வைரம் பொருந்திய அபயத்திருக்கை ஒன்றைச் சமர்ப்பித்தார். இத்தகவலை கோயில் துணைச் செயலாட்சித் தலைவர் திரு. இலக்ஷ்மீபதி அவர்கள் தெரிவித்தார். தாயார் நான்கு மாடவீதிகளில் திருவீதி வலம் வந்த பிறகு இந்த அபயத்திருக்கை தாயாருக்கு அலங்கரித்ததாக அவர் கூறினார்.

## ஒரே நாளில் 90 பேருக்கு அறுவை சிகிச்சை

உலக உடல் ஊனமுற்றோர் நாளை முன்னிட்டு திருப்பதி பாலாஜி உடல் ஊனமுற்றோர் மருத்துவமனையில் டாக்டர்கள் 14-3-98 அன்று 90 பேருக்கு அறுவை சிகிச்சை செய்தார்கள். இந்த அறுவை சிகிச்சையை பாலாஜி உடல் ஊனமுற்றோர் மருத்துவமனை இயக்குனர் டாக்டர். ஜெகதீஷ் அவர்களின் குழு நிகழ்த்தியது. அறுவை சிகிச்சைக்காக நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து உடல் ஊனமுற்றவர்கள் வந்தனர். அறுவை சிகிச்சை செய்து கொண்ட அனைவருக்கும் இலவச உணவு ஏற்பாடு செய்யப்பட்டது.

## பரிசளிப்பு விழா

தி.தி. தேவஸ்தானம் அன்ன மாச்சார்யா திட்டத்துறையினர் நிகழ்த்திய அன்னமாச்சார்யா பாடல் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு 10-3-98 அன்று பரிசுகளை வழங்கினர். இந்நிகழ்ச்சியில் தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்களும், இணைச் செயலாட்சித் தலைவர் திரு. டி. இராமகிருஷ்ணு அவர்களும் கலந்து கொண்டனர்.

மாநில அளவில் சப் ஜுனியர்ஸ் போட்டியில் குமாரி ஜி. அபூர்வ (ஹைதராபாத்), தே. தனுஜ (கம்மம்), எல்.என். தேஜா (ஸ்ரீகாகுலம்) பரிசு பெற்றனர். ஜுனியர்ஸ் போட்டியில் கேசிக் கல்யாண் (விஜயவாடா)

எம். சுவாதி (விஜயவாடா) வி. சௌம்யாவும் பரிசுகளை பெற்றனர்.

சீனியர்ஸ் அளவில் எம். ஸ்ரீராமாம், (வரங்கல்) கே. மைதிலி, (வைஜாக்) மாதுரி (விஜயவாடா) அவர்களுக்கு இணைச்செயலாட்சித் தலைவர் அவர்கள் பரிசுகளை வழங்கினார்.

ஊக்கப் பரிசுகளை ஹைதராபாத்தைச் சேர்ந்த சாயிசிந்து, சில்பாராவ், எஸ்.வி. ஹரிப்பிரியா, கர்நூலை சேர்ந்த கே. யாமினி, எம். ஹரீந்திரா, ஸ்ரீகாகுலம் சேர்ந்த ஜோத்ஸனா மாதுரி (விஜயவாடா) வி. ரமாபாரதி (திருப்பதி) சி.எச். ஹரிப்பிரியா (கர்நூல்) வடிராஜு (அநந்தபுரம்) பானுபிரகாஷ் (இரங்காரெட்டி) ஸ்வேதா (ஐதராபாத்) ராகவுலு (குண்டூர்) பெற்றனர்.

## "கோயில் திறப்புவிழா"

திருப்பதியில் ஸ்ரீராமகிருஷ்ணர் கோயிலை 8-3-98 சனியன்று இராமகிருஷ்ண மடம் தலைவர் திரு. இரங்கநாதசுவாமி திறந்து வைத்தார். ஏழைகளையும், பாதிப்புற்றவர்களையும் காப்பதே நம் மதத்தின் முக்கிய கொள்கையாகும் என்று அவர் பேசுகையில் கூறினார். பூஜைகள் செய்வது மட்டுமின்றி மனிதனுக்கு சேவை செய்வதும் நாம் கற்றுக் கொள்ள வேண்டியது ஆகும் என்றார். அதுபோது ஸ்ரீராமகிருஷ்ண சேவா சமிதி நினைவிதழ் ஒன்று வெளியிடப்பட்டது.

இக்கோயிலுக்கு தி.தி. தேவஸ்தானம் 50 சென்ட் இடத்தை அன்பளிப்பாக அளித்தது. இந்நிகழ்ச்சியில் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் துடா துணைத்தலைவர் திரு. அனந்தராம், ஸ்ரீகாளஹஸ்தியைச் சேர்ந்த சுகபிரம்மாசிரமம் ஸ்ரீவித்யா சுவரூபானந்த சுவாமி, சென்னை இராமகிருஷ்ண மடம் தலைவர் சுவாமி கீதானந்தா, திருமதி. சுகுணு மற்றும் பல பிரமுகர்கள் கலந்து கொண்டனர்.

## பத்மாவதி பூங்கா திறப்பு விழா

திருப்பதி பைராகிப்பட்டடையில் அழகாக உருவாக்கப்பட்ட பத்மாவதி பூங்காவை 20-3-98 வெள்ளியன்று செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். விநாயக் திறந்து வைத்தார். மூன்று ஏக்கர் நிலப்பரப்பு உள்ள இதில் சிறுவர்கள் விளையாடுவதற்குப் பல வசதிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதற்கு ரூபாய் 2.8 இலட்சம் செலவாயின.

இந்நிகழ்ச்சியில் தேவஸ்தான வனத்துறை அலுவலர் திரு. வெங்கடராமய்யா டி.எஸ். ஓ. திரு. ஸ்ரீநிவாச சாஸ்திரி, தலைமைப் பாதுகாப்பு அலுவலர் திரு. விஜயகுமார் மற்றும் உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

## திருமலையில் காஞ்சி பீடாதிபதி

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களும், திரு. விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களும், 20-3-98 வெள்ளியன்று காலையில் திருவேங்கடவனை தரிசித்தனர். சம்பிரதாயப்படி ஆலய முகப்பில் அவருக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது.

தரிசனம் முடிந்த பிறகு கோயில் வளாகத்தில் "கிலாதிகாரம்" என்ற நூலை வெளியிட்டார். இதில் வைகானச ஆகம சாஸ்திர முறைகள் பற்றிய தகவல்கள் அடங்கியுள்ளது. இதை திரு. மாடம்பாக்கம் ஸ்ரீநிவாசபட்டாச்சார்யா மேற்பார்வையில் புதுப்பித்து வெளியீடு செய்யப்பட்டது. இந்நிகழ்ச்சியில் ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள், தேவஸ்தானச் செயலாட்சித்தலைவர் மற்றும் உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

## "பெருமாளுக்கு இலக்ஷ்மி ஆரம்"

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள், ஸ்ரீவிஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பெருமாளுக்கு இலக்ஷ்மி ஆரம் பரிசளித்தனர். இது அரை கிலோ தங்கத்தினால் செய்யப்பட்டது. இவ் ஆரத்தில் 21 தங்க டாலர்கள் உள்ளது. இந்த ஆரத்தை அபிஷேகத்திற்குப் பிறகு சுவாமிக்கு செலுத்தினர்.

## கோயில் ஆழ்வார் திருமஞ்சனம்

திருமலை திருவேங்கடவன் ஆலயம் சுத்தம் செய்யும் கோயில் திருமஞ்சன நிகழ்ச்சி 24-3-98 செவ்வாயன்று நடந்

தது. இதை முன்னிட்டு சுகந்த திரவியத்தினால் கோயில் வளாகத்தை சுத்தம் செய்தனர். இந்த நிகழ்ச்சி வருடத்திற்கு நான்கு முறை நடக்கும் தற்பொழுது யுகாதியை முன் னிட்டு செய்யப்பட்டது.



## திருமலையான் தெப்போத்ஸவம்

திருமலையில் 8-3-98 முதல் 12-3-98 வரை தெப்போத்ஸவம் வைபவமாக நடந்தது. முதல் நாள் பெருமாள் ஸ்ரீராமராக அனுமன் வாகனத்தில் மேள தாளங்களுடன், கஜ சுரக பதாதி கள் பின்தொடர நான்கு மாட வீதியில் ஊர்வலமாக கொண்டு வந்தனர். பிறகு திருக்குளத் தில் மின் அலங்காரம் செய் யப்பட்ட தெப்பத்தில் மூன்று முறை வலம் வந்தனர்.

இந்நிகழ்ச்சியில் செயலாட்சித் தலைவர் அவர்கள் இணைச் செயலாட்சித் தலைவர் அவர் கள் கோயில் துணைச் செய லாட்சித் தலைவர் மற்றும் உயர் அலுவலர்கள் பங்கேற்றனர்.

இரண்டாவது நாள் சுவாமி ருக்மிணி சமேதராய் கண் ணன் வடிவத்தில் திருக்குளத் தில் வலம் வந்தார். மாலை நான்கு மாடவீதியில் திருவீதி வலமாக வந்த பிறகு தெப்பத் தில் வலம் வந்தார்.

நான்காவது நாள் விழாவில் தி.தி. தேவஸ்தானப் பொறுப் பாண்மைக்குழுத் தலைவர் திரு. கே. இராமச்ந்திர ராஜு, உறுப்பி னர்கள் திரு. மஹாதேவ நாயுடு, திரு. ராதா கிருஷ்ணமராஜு, திரு. நரசிம்மலு, திருமதி. ஏ. சீதாதேவி, திருமதி. இ. சீதாரா மம்மா திரு. குமார் சந்தாலியா மற்றும் பலர் கலந்து கொண்ட னர். 12-3-98 அன்று இவ்விழா இனிதே முடிவுபெற்றது.





## திருப்பதியில்....

அண்மையில் தி.தி. தேவஸ் தானம் ஆழ்வார் திவ்யப் பிர பந்தத் திட்டத்துறையின ரால் திருமழிசையாழ்வார் திரு நக்ஷத்திர திருநாளும், திருப் பாவை போட்டியில் வெற்றி பெற்ற உள்ளூர் மாணவர்க ளுக்கு பரிசளிப்பு விழாவும் அன்னமாச்சார்யா கலாமந்திரத் தில் மிகவு சிறப்பாகக் கொண் டாடப்பட்டது. இதுபோது பெரிய ஜீயர் மடத்து அத் யாபகர்கள் விழாவின் தொடக் கமாக பிரார்த்தனை செய்த னர். இவ்விழாவிற்கு டாக் டர். மேடசானி மோகன், இயக்



குனர் ஆழ்வார் திவ்யப் பிரபந்த திட்டத்துறை அவர்கள் தலைமை தாங்கினார். பேராசிரியர் கே. சர்வோத்தமராவ் தெலுங்குத்துறை திருவேங்கடவன் பல்கலைக்கழகம் அவர்களால் மாணவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன. இந்நிகழ்ச்சியில் திருப்பாவை போட்டியில் நடுவராக பொறுப்பேற்ற திரு. என்.எஸ். இராமமூர்த்தி, ஆசிரியர் ஸப்தகிரி அவர்களும் கலந்துகொண்டு விழாவினைச் சிறப்பித்தார்.

9ஆம் வகுப்பு மற்றும் 10ஆம் வகுப்பு மாணவர்களுக்கிடையேயான திருப்பாவை போட்டியில் செல்வி ஜீ. சௌமத்ரி, பத்தாம் வகுப்பு, ஆதர்ஸ வித்யாலயா ஆங்கிலப் பயிற்றுமொழிப் பள்ளி, திருப்பதி, செல்வி. ஆர். ஹேமலதா 10ஆம் வகுப்பு, சத்ய சாயி ஆங்கிலப் பயிற்றுமொழிப் பள்ளி, திருப்பதி, செல்வன். எஸ். ராஜகுமார் 10ஆம் வகுப்பு டி.சி.ஏ. தமிழ் உயர்நிலைப்பள்ளி, திருப்பதி அவர்கள் முறையே முதல், இரண்டு, மூன்றும் பரிசினைப் பெற்றனர்.

6ஆம் வகுப்பு முதல் 8ஆம் வகுப்பு வரை மாணவர்களுக்கிடையேயான திருப்பாவைப் போட்டியில் செல்வி. ஏ.ஆர். நித்யா, ஆறும் வகுப்பு, திருவேங்கடவன் குழந்தைகள் உயர்நிலைப்பள்ளி, திருப்பதி செல்வன். ஸ்ரீராம், எட்டாம் வகுப்பு ஆதர்ஸா வித்யாலயா ஆங்கிலப் பள்ளி, திருபபதி, செல்வி. கே.சி. அனுஷா, 8ஆம் வகுப்பு ஸ்ரீசத்ய சாயி ஸ்ரீனிவாசா ஆங்கிலப் பயிற்று மொழிப்பள்ளி, திருப்பதி அவர்களுக்கு முறையே முதல், இரண்டு, மூன்றும் பரிசுகள் வழங்கப்பட்டன.

அதன் பின்னர் இரவு 7 மணிக்கு திரு. பி.ஆர். ரங்கராஜன் அவர்கள் திருமழிசையாழ்வாரின் வைபவத்தைப் பற்றி உரை நிகழ்த்தினார். பின்பு விழா இனிதே முடிவுபெற்றது.



# கோயில் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் நலவாழ்விற்காக

# நன்கொடை விண்ணப்பம்

கோயில்கள் மக்களுக்கு ஆன்மீக இன்பத்தினை தந்திடுவது மட்டுமன்றி இந்தியக் கலா சாரத்தின், சனாதன தர்மத்தின் பெருமையை விளக்கிடும் வெற்றிச்சின்னங்களாக காலம் காலமாக விளங்கிவருகின்றன.

அர்ச்சகர்களுக்கும் மற்ற ஊழியர்களுக்கும் போதுமான ஊதியம் அளிக்க இயலாமல் போதிய வருவாயும் இல்லாத 20,000க்கும் மேற்பட்ட கோயில்கள் ஆந்திர மாநிலத்தில் உள்ளதென்பது மறைக்க முடியாத செய்தியாகும். பெரும்பாலான கோயில்களில் அர்ச்சகர்களுக்கு அளிக்கும் ஊதியம் கோயிலில் வருகின்ற அற்ப வருவாயின் மீது ஆதாரப்பட்டுள்ளமை வருந்தத்தக்க செய்தியாகும். இதனால் அர்ச்சகர்களும் மற்ற ஊழியர்களும் வறுமையின் காரணமாக அவர்களுடைய பிள்ளைகளுக்குத் தகுந்த அடிப்படைக் கல்வியினைக்கூட அளிக்கமுடியாமல் செலவுகளைத் தாங்கிக் கொண்டு ஏழ்மையில் வாழ்கின்றனர்.

இந்திய உச்சநீதிமன்றத்தின் அறிவுரைப்படி ஆந்திர மாநில அரசு ஒரு குறிப்பிட்ட தொகையினை அதாவது ரூ. 75 கோடி கூட்டுநிதியாக தற்காலிகமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்றும், அத்தொகையினை உயர்ந்த நிலையில் உள்ள கோயில்களிலிருந்தும், மற்றும் அனுமதிக்கப்படும் மற்றைய வழிகளின் மூலமும் பெற்று ஒரு நலவாழ்வு திட்டத்தின் கீழ் இத்தொகையினை அறநிலையத்துறையின் மேற்பார்வையின் கீழ் செயல்படும் கோயில்களில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் இதர ஊழியர்களின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்துள்ளது.

இத்திட்டத்தின்கீழ் கோயிலில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் குடும்பங்களுக்குத் தகுந்த வீடு, கல்வி மற்றும் ஆகம கல்வி போன்றவையும், மருத்துவ வசதியும், அவர்களுடைய பிள்ளைகளுக்குக் கல்வி வசதியும், அவர்கள் சொந்த வீடு கட்டிக்கொள்ள கடனுதவியும், கூட்டு காப்பீட்டுத்திட்டமும், எதிர்பாராத விபத்திற்கும், இறப்பு முதலானவைக்கும், விதவைகளுக்கு மறுவாழ்வு, காப்பகங்கள் அல்லது அவர்களுக்கு தேவையான பொருளுதவியும், படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கு பொருளுதவியும் அளிக்க இந்த நலவாழ்வு திட்டம் அமுலுக்கு கொண்டு வரப்படுகிறது. ஆந்திர மாநில அரசாங்கத்தின் விதிமுறைகளின்படி அவ் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழும் மேற்பார்வையிலும் இந்த நிதிதிட்டம் செயல்பட இந்திய உச்ச நீதிமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டு இந்திய குடியரசு தலைவர் அவர்களால் 1-6-97-இல் இத்திட்டம் துவக்கி வைக்கப்பட்டது.

இது தொடர்பாக ஆந்திரமாநில அரசு வெளிநாட்டில் மற்றும் இந்தியாவில் உள்ள பல்வேறு நிறுவனங்களிடமிருந்தும் நன்கொடை கோரியுள்ளது. இவற்றிற்கு வருமானவரி விலக்கு கோரி வருமான வரித்துறை மற்றும் இந்திய அரசிடம் மாநில அரசு விண்ணப்பித்துள்ளது.

ஆகையால் அனைத்து அமைப்புகள், நிறுவனங்கள் மற்றும் இரக்க குணமுடைய பொதுமக்கள் அனைவரும் நன்கொடையாக தாராளமாக பொருள் தந்து உதவிடுமாறு ஆந்திர மாநில அரசு கேட்டுக்கொள்கின்றது. நன்கொடை அனுப்புவோர் தொகையினை கேட்பு காசோலையாகவோ அல்லது காசோலையாகவோ "அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்கள் நலவாழ்வு திட்ட நன்கொடை" என்று குறிப்பிட்டு "The Commissioner, Endowment Dept., Govt. of Andhra Pradesh, Hyderabad" எனும் பெயருக்கு எடுத்து அனுப்பவும்.

# அனந்தாழ்வான் வைபவம்

திரு. தி.அ. ஸ்ரீநிவாஸன் - சின்ன காஞ்சிபுரம்.

எம்பெருமானார் தரிசனத்தில் அர்த்த பஞ்சகத்தில் புருஷார்த்த ஸ்வரூபம் கைங்கர்யமேயென்பது அறுதியீடு. இதனையொட்டி எம்பெருமானாரின் அருளாசி பெற்று வேங்கட மலைக்கு எழுந்தருளி தம் வாழ்நாள் பூராவும் திருமலையின்கண் கைங்கர்யத்தில் ஈடுபட்டு நிகரற்ற பெருமை பெற்றவர் அனந்தாழ்வான். அவர் வைபவம் அளவற்றது. ஆழ்வார்கள் ஆசாரியரகள் வைபவத்தில் சில சிறப்புகளைக் காண்கிறோம்.

நம்மாழ்வார் 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும்' என்று சிந்து பூ மகிழும் வேங்கடத்தில் கைங்கர்யத்தை வேண்டுகிறார். குலசேகராழ்வார் படியாய்க் கிடந்து உன் பவள வாய் காண்பேனே', 'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே' என்று சேதனமாகவோ அல்லது அசேதனமாகவோ திருமலை வாஸத்தை வேண்டுகிறார் பெரியாழ்வார். ஆண்டாளை வளர்த்ததனால் எம்பெருமானுக்கு மாமனாராகிறார்.

மதுரகவிகள் ஆசார்ய நிஷ்டைக்கு ஓர் உதாரணமாக விளங்குகிறார். திருக்கச்சி நம்பிகள் பேரருளாளனிடம் நேரில் பேசும் (ஸல்லாபம் செய்யும்) பாக்யத்தைப் பெறுகிறார்.

எம்பெருமானார் ஆதிசேஷாம்சமாக அவதரிக்கிறார். மாமுனிகள் அரங்கனுக்கு ஆசார்யனாகிறார். மேலே கூறப்பட்ட சிறப்புக்களெல்லாம் அனந்தாழ்வான் ஒருவரிடமே காணலாம். இவைகளைச் சிறிது விளக்குவோம்.

ஒருசமயம் எம்பெருமானார் பகவத் விஷய காலக்ஷேபம் சாதித்துக்கொண்டிருக்கையில் 'சிந்துபூ மகிழும் திருவேங்கடத்து' எனும் கட்டத்தில் நம்மாழ்வாரின் இந்தப் பாரிப்பைப் பூர்த்தி செய்யும் பொருட்டு 'திருமலைக்குச் சென்று நந்தவனம்



அமைதது வேங்கடவனுக்கு புஷ்ப கைங்கரியம் செய்வார் எவரேனும் இங்கு உளரோ?' என்று கேள்வி விடுத்தார். குளிரருவி வேங்கடமாய் இருப்பதாலும், அடர்ந்த காட்டினூடே துஷ்டமிருகங்கள் கூடியதாயும் வாஸத்துக்கு மிகவும் அஞ்சும்படி இருந்தபடியாலும் எவரும் இதை ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. அவ்வளவிலே காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்த அனந்தாழ்வான் என்ற சீடர் எழுந்து நின்று மிக்க பணிவுடன் 'அடியேனுக்கு அருள் புரிந்தால் இந்த க்ஷணமே விடைகொள்கிறேன்' என்று ப்ரார்த்தித்தார். அவரது துணிவைக் கண்டு எம்பெருமானார் மனமுவந்து 'திருமலையிலுள்ள கஷ்டங்களை அறிந்தும் என் அபிலாஷையை பூர்த்தி செய்யும் வகையில் உமது ஆசார்ய பக்தி அமைந்ததை மிகவும் பாராட்டுகிறேன். இவ்வளவு பெரிய கோஷ்டியில் 'நீர் ஒருவரே ஆண்பிள்ளை' என்று புகழ்ந்து ஆசீர்வதித்து விடைகொடுத்தார்.

இதுபற்றியே அவ்வம்சத்தில் தோன்றியவர்கள் தங்களை அனந்தாண்பிள்ளை என்று கூறிக்கொள்கின்றனர். எம்பெருமானார் அருளாசி பெற்ற அனந்தாழ்வான் திருமலைக்கு எழுந்தருளி நந்தவனம் அமைத்து தம் வாழ்நாள் முழுவதும் வேங்கடவன் கைங்கர்யத்திலேயே கழித்தார். ஆக நம்மாழ்வாரின் பாரிப்பையும் ஆசார்ய நியமனத்தையும் பூர்த்தி செய்தாயிற்று.

ஒரு சமயம் அனந்தாழ்வான் திருமலையை விட்டு புறப்பட நேர்ந்தது. அதன்படி சில ஸ்ரீவைஷ்ணவர்களுடன் வழிக்குப் பாக்குப் பட்டையில் ப்ரசாதமும் எடுத்துக்கொண்டு பயணமானார். வழியில் மதியம் ஒரு இடத்தில் ஆஹாரத்திற்காகப் பாக்குப்பட்டையை அவிழ்த்தபோது, அதில் நிறைய எறும்புகள் இருப்பதைக் கண்டார்.

அவருக்கு உடனே குலசேகராழ்வாரின் பாசுரம் நினைவுக்கு வந்தது. ஆழ்வார் விரும்பிய படி 'எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே' என்பதாலன்றே, எறும்புகளாய்த் திருமலை வாஸத்தை ஏற்றுவாழ்கின்றன. அவைகளை அங்கிருந்து அகற்றி அபசாரப் படக்கூடாது என்ற எண்ணம் கொண்டு அந்த ப்ரசாத மூட்டையை அப்படியே எடுத்துக் கொண்டு போய் திருமலையில் விட்டுவரும்படி நியமித்தார்.

அனந்தாழ்வான் திருமலைக்குச் சென்று கைங்கர்யம் செய்துகொண்டே, தம் சிஷ்யர்களைக் கொண்டு கோபுர, மண்டபாதிகளைக் கட்டுவித்து, சுற்றித் திருமதிள் நிர்மாணம் செய்வதில் ஈடுபட்டார். அப்போது மதிள் கட்டும் வழியில் ஒரு செண்பக மரம் தடையாக இருப்பதைத் கண்டு, சில்பிகள் அதை வெட்டிவிட முடிவெடுத்தனர். திருமலையில் வாழும் சேதன, அசேதனங்கள் யாவும் குலசேகராழ்வார் விருப்பப்படி வாழும் நித்யஸூரிகளுக்குச் சமானமாகக் கருதும் அனந்தாழ்வான் அந்த செண்பக மரத்திற்குத் தீங்கு செய்ய விரும்பவில்லை. அதை அப்படியே விட்டால் திருமதிள் நேராக அமையாது குறைபாடு ஏற்படும். அனந்தாழ்வான் சில்பி முதலானவர்களை அனுப்பி 'மறுநாள் பார்ப்போம்; அதற்கு விடை காணலாம்' என்றுர். அன்றிரவு யோசனையோடே திருவேங்கடவனை முன்னிட்டு அந்த வ்ருக்ஷத்தையே நோக்கி 'எம்பெருமான் கைங்கர்யத்திற்கு அனுகுணமாகச் சற்று ஒதுங்கலாகாதோ' என்று ப்ரார்த்தித்துத் தூங்கச் சென்றுர். என்ன ஆச்சரியம்! மறுநாள் காலை அந்த செண்பக மரம் மதிள் வழியைவிட்டு ஒதுங்கியிருந்ததைக் கண்டு எல்லோரும் வியப்புக் குள்ளாயினர். மதிளும் செவ்வனே கட்டப்பட்டது. அந்தச் சுற்றுக்கு செண்பக ப்ராகாரமென்றே பெயரிடப்பட்டது.

அனந்தாழ்வான் வெகுநாள் கைங்கரியத்திலேயே ஈடுபட்டு ஒரு திருவாடிப்பூர நன்னாளில் திருநாட்டுக்கெழுந்தருளினார். அவரை நந்தவனத்திலே அடக்கம் செய்யப்பட்டு, அந்த பிருந்தாவனத்தில் அந்நாள் முதற்கொண்டு வளர்ந்திருக்கின்ற மகிழ மரத்தை நாம் இன்றும் காணலாம். அவர் வாழ்நாளில் குலசேகராழ்வாரின் அத்யவஸாயத்தில் ஈடுபட்டிருந்தமையால் அதற்குச் சேர அவரே மகிழ மரமாய் அவதரித்ததாக நம்பப்படுகின்றது. திருவேங்கடமுடையானும் இதை ஊர்ஜிதப்படுத்தும் வகையில் தோட்டத்துக்கு எழுந்தருளி, மகிழ மரத்தை அனந்தாழ்வானாகவே பாவித்து பரிவட்டம் மாலை ஸ்ரீசடகோபன் இத்யாதி மரியாதைகளை ஸாதித்தருளுகிறுர். இத்தால் குலசேகராழ்வார் பாரிப்பை இவர் திவ்ய சரிதத்தில் அனுபவித்தோம்.

ஒரு சமயம் அனந்தாழ்வான் நந்தவனத்தில் ஸ்ரீனிவாஸனும் அலர்மேல் மங்கையும் புகுந்து புஷ்பங்களையும், பழங்களையும் கொய்து நந்தவனமெங்கும் தாம்பூலத்தோடு பழக்கொட்டைகளையும் துப்பி விகாரப் படுத்தி மறைந்தனர். இவ்வாறு நந்தவனம் விகாரப்பட்டு அதன் புனிதமும் கெட்டுவிட்டதைக் கண்ட அனந்தாழ்வான் 'எந்தத் திருடன் இம்மாதிரி செய்தது என்பதைக் கண்டு பிடியுங்கள்' என்று காவலாளிகளுக்கு உத்தரவிட்டார். மறுநாளும் அவ்விதமே நடந்தது. காவலர்களால் கண்டுபிடிக்கமுடியவில்லை. அப்புறம் சிஷ்யர்களை நியமித்து காவலிருந்தும் புலப்படவில்லை. கடைசியில் ஒரு நாள் இரவு அனந்தாழ்வானுக்கு அத்திவ்ய தம்பதிகள் தென்பட்டனர். அனந்தாழ்வார் ஓடிச் சென்று அவர்களை ஒருமரத்தடியில் கட்டுவதற்கு முனைய, புருஷன் விடுவித்திக் கொண்டு ஓடிவிட்டான். பெண்பிள்ளை மாத்திரம் அகப்பட்டுக் கொண்டாள். அவளைத் தப்பிக்கவிடாமல் மரத்தில் அழுந்தக் கட்டி 'நீங்கள் யார்? பெருமாளுக்கு ஏற்பட்டிருக்கும் இந்த நந்தவனத்தின் புனிதத் தன்மையைக் கெடுத்து, உங்கள் விகாரச் செயல்களை செய்து, எங்குப் பார்த்தாலும் தாம்பூல எச்சில்களைத் துப்பியுள்ளீர்களே. ஓடிப் போன உன் கணவர் யார்? அவர் பெயர் என்ன' என்று பலவாறு கேள்விகளை அடுக்கிக்கொண்டே போனார். அந்த பெண்மணியும் மிகவும் பயந்தது போல் 'நாங்கள் இம்மலை சிற்றரசர் போன்றவர்கள். இதன் புனிதத் தன்மை கெடவேண்டும் என்று நாங்கள் தெரிந்து கொண்டு தவறு செய்யவில்லை. என் கணவர் இதன் ரமணீயத்தில் கவரப்பட்டு அழைத்து வந்தார். அவர் செய்த செயலுக்கு நான் என்ன செய்யக்கூடும். நீர் ஸகல சாஸ்த்திரம் அறிந்தவர். நான் எப்படி அவர் பெயரைச் சொல்லக்கூடும். என்னை உம் பெண் போல் பாவித்து விட்டுவிடும்' என்றுள். அதற்கு அவர் 'நீ வெகு சாமர்த்தியமாய் கணவனைக் காட்டிக்கொடாமல் பேசுகிறுய். உன்னை

விட்டால் அப்புறம் அவனைக் கண்டு கொள்வது எப்படி? உன்னை விட்டு அவன் அகல மாட்டான். ஆகையால் உன்னைப் பிடித்து பொழுது விடியும் வரையில் வைத்திருந்தால் அவனை எளிதில் கண்டுகொள்ளலாம். பிறகு உன்னை விடுகிறேன்' என்று அப்போதைக்கு முடிவு கட்டிவிட்டார். பொழுது விடிந்ததும் அர்ச்சகர்கள் பெருமாள் திருமார்பில் நாச்சியாரைக் காணுமல் வெளியே அதிகாரிகளுக்கு தெரியப்படுத்தினர். இடையில் பெருமாள் அர்ச்சகர் மேல் ஆவேசித்து முதல் நாள் இரவு தாம் நடத்திய லீலா விநோதத்தைத் தெரியப் படுத்தி 'இச்செய்தியை அனந்தாழ்வானுக்கு அறிவித்து நாச்சியாருடன் வாருங்கள்' என்று ஆஜ்ஞாபித்தார். அதன்படியே அனந்தாழ்வானுக்கு எம்பெருமானுடைய திருவாராதனத்திற்கு நாச்சியாருடன் வருமாறு அழைப்பு விடுத்தார்கள். பிராட்டியும் 'அனந்தாழ்வானுக்குப் பெண்ணுகக் கடவேன்' என்று சொன்னபடிக்கு விவாகத்துக்குரிய கன்யாபெண்ணுகவே மாறி விட்டாள். அனந்தாழ்வானும் அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு புஷ்ப குடலையும் கன்யா பெண்ணையும் கோயிலுக்கு அழைத்துச் செல்ல, எம்பெருமானும் புன்சிரிப்புடன் அவரை எதிர்கொண்டு 'வாரீர்! உமது இந்தப் பெண்ணை எனக்கு விவாஹம் செய்வித்த ருளுவீர்' என்று சொல்லிப் பெண்ணை ஏற்றுக்கொண்டு பஹுமானங்கள் அனந்தாழ்வானுக்குச் சமர்ப்பிக்க, அலர்மேல் மங்கையும் முன்போல் பொன்மயமான திருமேனி பெற்று திருவேங்கடவனின் திருமார்பில் ஸேவை சாதித்தாள். எம்பெருமானும் அலர் மேல்மங்கை உறைமார்பினன் ஆனான். ஆக, அலர்மேல் மங்கை நாச்சியாருக்கு திருத் தகப்பனாராகவும், ஸ்ரீனிவாஸனுக்கு, பெரியாழ்வார் அழகிய மணவாளனுக்கு மாமனார் ஆனதுபோல், மாமனார் ஆனார். இதுபற்றியே அனந்தாழ்வான் வாழித்திருநாமத்தில் 'மலையில் வேங்கடவர்க்கு மாமனார் வாழியே' என்று அனுசந்திக்கப்படுகிறது. அனந்தாழ்வான் மாமனார் ஸ்தானத்தை நினைவூட்டும் வகையில் ப்ரதி வருஷம் திருத்தேர் மஹோத்ஸவத்தில் புதிய பீதாம்பரம் எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கப்படுகின்றது. ஆக பெரியாழ்வார் பெற்ற சிறப்பும் இங்குக் கிட்டியது.

ஒரு சமயம் அனந்தாழ்வான் மாலை கட்டிக்கொண்டிருக்கும் போது திருவேங்கடமுடையான் உடனே வரும்படி நியமித்ததாகக் கட்டளை வந்தது. மலர்மொட்டுகள் மலர்ந்து விடுவதற்குள் மாலை கட்டியாக வேண்டும் என்பது தம்முடைய ஆசார்யரான ராமானுஜரின் கட்டளை. ஆகவே மாலைகட்டிக்கொண்டு வழக்கம் போல் கோயிலுக்கு எழுந்தருளி புஷ்பகுடலையை சந்நிதியில் வைத்தார். திருவேங்கடமுடையான் 'நாம் கூப்பிட்டனுப்பியும் உபேக்ஷை செய்தீர். மாலை நாம் சாத்திக்கொள்ளப்போவதில்லை. ஆகையால் உமக்கு இங்கு வேலை இல்லை. நீர் திருமலையைவிட்டுச் செல்லும்' என்ருர். அனந்தாழ்வான் பதிலுக்கு 'நீர் சொல்லி நாம் இங்கு வரவில்லை. ஆகவே நீர் சொல்லி போக இயலாது. எனது ஆசாரியன் நியமனத்தால் புஷ்ப கைங்கரியம் செய்ய இங்கு வந்தேன். பூக்கள் மலருவதற்குள் மாலை கட்டுவது தவிர்க்கமுடியாது. கைங்கர்யத்தில் குறைபாடு இல்லாமல் செய்வதுதான் அடியேனுக்கு முக்கியம். அதற்கு விரோதம் ஏற்படும் எந்த கட்டளையையும் ஏற்கமுடியாது. ஆசார்யன் உகந்த கைங்கர்யம் செவ்வனே செய்து புஷ்ப மாலையைக் கட்டி இங்கு சமர்ப்பிப்பது அடியேன் கடமை. அப்புறம் சாத்திக்கொள்வது பற்றி அடியேன் அக்கரை காட்ட வேண்டிய அவசியமில்லை. அடுத்தபடியாக "பரன்சென்று சேர்த் திருவேங்கடமாமலை" என்பது ஆழ்வார் திருவாக்கு. இந்தமலை தேவரீருக்குச் சொந்தமன்று. நாம் இரண்டு பேரும் இங்கு வந்தவர்கள். தேவரீர் அடியேனுக்குச் சற்று முந்தி எழுந்தருளினீர்' என்ருர். இதைக் கேட்ட வேங்கடவன் இவருடைய ஆசார்ய நிஷ்டையை மிக உகந்து மதுரகவிகள் போல் ஆசார்யனிடம் இருக்கும் மன உறுதியைக் கண்டு மகிழ்ந்து அனந்தாழ்வானுக்கும் அவருடைய ஸம்பந்த ஸம்பந்திகட்கும் மோக்ஷம் அருளினார். இதுபற்றியே அனந்தாண்பிள்ளை வம்சஸ்தர்கள் தங்களை 'மதுரகவிதாஸன்' என்று கூறிக்கொள்வர். தவிரவும் மதுரகவிகளும், அனந்தாழ்வானும் அவதரித்தது சித்திரையில் சித்திரை நக்ஷத்திரம். அவதார தினங்களும் ஒன்ருக அமைந்துள்ளன. மதுர கவிகள், ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வாரின் அர்ச்சாத் திருமேனியை ப்ரதிஷ்டை செய்து உத்ஸவாதிகளை ஏற்பாடு செய்தது போல், அனந்தாழ்வானும் திருமலையில் வேங்கடவனின் அனுமதியின் பேரில்

சந்நிதியிலேயே எம்பெருமானாரின் அர்ச்சாத் திருமேனியை ப்ரதிஷ்டை செய்வித்து அவருக்குத் திருநக்ஷத்ரோத்ஸவங்கள், சாற்றுமுறை உத்ஸவம் முதலிவைகளை ஏற்பாடு செய்தார்.

ஒருநாள் விடியற்காலையில் அனந்தாழ்வான் சிஷ்யர்களுடன் ஸ்வாமி புஷ்கரிணிக்குச் செல்லும் போது அவருடைய உத்திரியம் ஒரு மரத்தின் கீழ்ப் படுத்திருந்த புலியின் காதில் மாட்டிக்கொண்டு இழுத்தும் வராமல் இருக்கவே சிஷ்யர்கள் திரும்பிப் பார்த்துப் புலியைக் கண்டு அஞ்சினர். அப்புலி சாதுவாக இருக்கவே சிஷ்யர்கள் அனந்தாழ்வானை நோக்கி இப்புலி மோக்ஷம் பெறவேண்டி தேவரீர் திருவடியைப் பற்றி நிற்கின்றது போலும் என்றனர். அவரும் சிஷ்யர்களுடைய வார்த்தையை சத்யமாகக் கொண்டு அப்படியே அனுக்ரஹித்தார். அவர்கள் அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு திரும்பும்போது அப்புலி மரித்திருந்ததைக் கண்டு அனந்தாழ்வான் அனுக்ரஹம் மெய்யானதையும் கண்டு வியந்தனர். பிறகு அனந்தாழ்வான் வழக்கம்போல் ஸந்நிதி சேர, எம்பெருமான் அப்புலியை அவர் முன்னே நிறுத்தி வைத்து 'வாரீர் அனந்தாழ்வானே; தேவர்களுக்கும் மிகவும் துர்லபமான மோக்ஷத்தை புலி முதலியவைகட்கு நீர் கொடுக்கத் தொடங்கினால் இனி நமக்கிங்கென்ன. வேலை; நாம் போக வேண்டியதுதான். நீர் இங்கு இருக்கக்கடவீர்' என்றருளிச் செய்தார். அதைக் கேட்ட அனந்தாழ்வான் 'ஸ்வாமின்! புலிக்கு முக்தியளித்தது எப்படித் தவறாகும். தேவரீர்தானே அடியேனுடைய ஸம்பந்த ஸம்பந்திக்கும் மோக்ஷம் தந்தேன் என்று சாதித்தது' என்று கூற, வேங்கடவனும் இந்த ஸல்லாபங்கள் மூலம் அனந்தாழ்வானுடைய வைபவம் ப்ரகாசப்படுத்தவேண்டித் திருவுள்ளம் பற்றினதான அருள் புரிந்தார். ஆக மேற்கூறிய சம்பவங்கள் மதுரகவியின் சிறப்பும், திருக்கச்சி நம்பிகளின் சிறப்பும் இங்கு அனுபவிக்க ப்ராப்தமாயிற்று.

ஆதிசேஷனே எம்பெருமானாராக அவதரித்தார் என்பது எல்லோரும் அறிந்த விஷயம். அனந்தாழ்வான் பெயரிலேயே அவரும் ஆதிசேஷாம்சம் உள்ளவர் என்று புலனாகிறது. அவருடைய திவ்ய சரித்திரத்திலும் அதற்குச் சான்றுகள் உள்ளன. ஒரு சமயம் அவர் நந்தவனத்தில் புஷ்பங்களைப் பறிக்கின்ற காலத்தில் ஓர் அரவு தீண்ட, அதைப் பொருட்படுத்தாமல் புஷ்கரிணியில் நீராடி வழக்கம் போல் கைங்கர்யத்தில் ஈடுபட்டு சந்நிதிக்குச் சென்றார். அங்கு திருவேங்கடமுடையான் அனந்தாழ்வானை நோக்கி 'அரவு தீண்ட அவ்விஷத்திற்கு சிகித்ஸை செய்து தீர்த்துக் கொள்ள முயற்சியாமல் ஏன் இருக்கின்றீர்' என வினவினார். அனந்தாழ்வானும் 'ஸ்வாமின்! ஆத்மாவை நசிக்கும்படியான அஹங்காரமாகிற கொடிய விஷம் கூடிக்கொண்டிருக்கும் போது பாம்பின் விஷம் வலிவற்றது. ஒன்றும் செய்ய இயலாது. முதல் விஷத்தைப் போக்க உத்தம வைத்தியரான தேவரீரைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்' என்றார். அதைக் கேட்டு வேங்கடவன் 'பூலோகத்தில் பிறந்து மநுஷ்ய தர்மத்திற்குச் சேர சிகித்ஸையை செய்து கொள்ளாமல் நீர் சரீரத்தை உபேக்ஷித்தால் நாம் உம்மோடு சேர்ந்து இங்கு இருக்கையாகிற ஆனந்தத்தையல்லவா இழக்க நேரிடும்' என்றார். அதைக் கேட்ட அனந்தாழ்வானும் கீழ்க் கண்டவாறு அளித்த பதிலிலிருந்து அவருடைய ஆதிசேஷாம்சத்தை வெளிப்படுத்தினாராயிற்று. 'ஸ்வாமின்! கடித்த பாம்பு வலிதாகில் விரஜையில் நீராடி, ஸ்ரீவைகுண்டத்திலே கைங்கர்ய ப்ராப்தம்; கடியுண்ட பாம்பு வலிதாகில் கோனேரியில் நீராடி, திருமலையிலே கைங்கர்ய ப்ராப்தம்; ஆக, பிரிவென்பது எனக்குக் காணவில்லை' என்றார். திருவேங்கடமுடையானின் கடாக்ஷம் இருக்கும்போது தனக்கு எந்தத் தீங்கும் நேரிடாது என்ற அத்யவசாயத்துடனே அனந்தாழ்வான் எப்பொழுதும் போல் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்தார். இத்தால் அவர் ஆதிசேஷாம்சச் சிறப்பை பெற்றிருந்தது வெளியாயிற்று.

நம்பெருமாள் மணவாள மாமுனிகளை ஆசார்யனாக ஏற்று 'ஸ்ரீசைலேச....' தனியன் அருளியதுபோல் திருவேங்கடமுடையானும் அனந்தாழ்வானை ஆசாரயனாக ஏற்றுக்கொண்ட வ்ருத்தாந்தம் கீழே விவரிக்கப்பட்டுள்ளது. ஒரு சமயம் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவேங்கடயாத்திரையாக திருமலையேறி வருகின்ற பொழுது, அவர்கள் பசி, தாஹாதிகளால் ச்ரமப்படுவதைக் கண்ட ஸ்ரீனிவாஸன் ஒரு பிரம்மச்சாரி வேஷத்தில் ப்ரஸாதங்களை எடுத்துக்கொண்டு அவர்கள் முன் தோன்றி அவைகளை ஸ்வீகரிக்குமாறு வேண்டினான். அவர்கள் இந்த பிரமமச்சாரி ஸ்வரூப வைலக்ஷண்யத்தைத் தெரிந்து கொள்ளாமல் ஸ்வீகரிக்கத் தயங்

கினர். அதுகண்டு பிரம்மச்சாரியாக வந்த எம்பெருமான் 'ஸ்வாமிகாள்! அடியேன் மதுரகவிதாஸன்; ஸ்வாமி அனந்தாழ்வானின் சிஷ்யன்! யாரோ முன்னாடி வந்த யாத்ரீகர்கள் மூலம் நீங்கள் ஏறிவருவதை அறிந்து அடியேனுடைய ஆசாரியன் திருவேங்கடமுடையான் ப்ரஸாதங்களை அடியேன் மூலம் அனுப்பிவைத்துள்ளார். ஆகையால் தயங்காமல் ஸ்வீகரிக்கவேண்டும்' என்றார். ஸ்ரீவைஷ்ணவர்கள் 'அப்படியாகில் ஆசார்யன் தனியனை ஸேவியும்' என்றார்கள். பிரம்மசாரியும் அந்த க்ஷணமே

'அகிலாத்மகுணாவாஸம்
அஜ்ஞானதிமிராபஹம்
ஆச்ரிதானாம் ஸுசரணம் வந்தே
அனந்தார்யதேசிகம்'

என்று ஒரு தனியனை தன் வல்லமையால் நிருமித்து அருளினான். அதுகேட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் 'ப்ராசார்யரான உடையவர் சம்பந்தம் இதில் காணக்கிடைக்கவில்லையே' என்றனர். உடனே இந்த இக்கட்டைச் சமாளிப்பதற்கு 'அடியேனுடைய ஆசாரியனின் தனியன் இரண்டு பாகங்களாய் உள்ளது. முதல் பாகம் அவரின் குணபூர்த்தியை எடுத்துக் காட்டுவது. அடுத்தது ஆசார்ய சம்பந்தத்தின் பெருமையை உரைப்பது' என்று சொல்லி,

ஸ்ரீமத்ராமானுஜாசார்ய ஸ்ரீபாதாம்
போருஹத்வயம்
ஸதுத்தமாங்கஸந்தார்யம்
அனந்தார்யம் அஹம்பஜே ||

என்று முடித்தார். ஆக ஸ்ரீவைஷ்ணவர்கள் தெளிவு பெற்றவர்களாய் ப்ரஸாதங்களை ஸ்வீகரித்தனர். பிரம்மசாரியும் தம் காரியம் முடிந்தபடியால் அவர்களிடம் 'நீங்கள் ச்ரம பரிஹாரம் பண்ணிக் கொண்டு நிதானமாய் வாருங்கள். நான் முன்னமேயே சென்று ஆசாரியனிடம் தெரிவித்து விடுகிறேன்' என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டான். பிறகு சில நாழிகைகள் கழித்து அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அனந்தாழ்வான் திருமாளிகை சேர்ந்து, அவர் சிஷ்யரான மதுரகவி தாஸன் மூலம் அனுப்பின ப்ரஸாதங்கள் பரம போக்யமாய்த் தக்க சமயத்தில் அவர்களின் விடாய் தீர்ந்ததைப் பற்றி புகழ்ந்து பேசிக்கொண்டனர். இதைக் கேட்ட அனந்தாழ்வான் மிகவும் ஆச்சரியம் அடைந்து தமக்கு அம்மாதிரி சிஷ்யனும் இல்லை; தாம் ப்ரஸாதமும் அனுப்பவில்லையே என்றார். இதைக் கேட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்த சிஷ்யன ஒப்புவித்த ஆசாரிய தனியனையும் ஸேவித்துக் காட்டினர். முடிவில் திருவேங்கடமுடையான் அனந்தாழ்வாரின் மீது கொண்ட பேரன்பினால் செய்த அனுக்ரஹம் என்று தெளிவாயிற்று. இப்படியாக அனந்தாழ்வானிடம் வார்த்தைகள் பரிமாறி அவர் பெருமையை வெளிப்படுத்துவதில் வேங்கடவன் மகிழ்ந்தார். அவருக்கு சிஷ்யனாகவும், அவரை மாமனாராக ஆக்கிக் கொண்டும் பலவிதங்களாக ஸம்பந்தங்களை ஏற்படுத்திக்கொண்டார். தாம் க்ருஷ்ணாவதாரத்தில் மரத்தில் கட்டுண்ணப்போல், அவர் தேவிகளை மரத்தில்கட்டுண்ணப்பண்ணினார். ஆசார்யன் கட்டளையை மீறினால் சிஷ்யன் ஆசாரியனால் சிக்ஷிக்கப்படவேண்டியவன் என்ற மரபையொட்டி ஆசாரியனிடமிருந்து முகவாய்க் கட்டையில் அடியைப் பெற்றுக்கொண்டு, அதற்கு சிகித்ஸையாக பச்சைக்கற்பூரத்தை ஸ்ரீபாதரேணு என்ற பெயரில் இன்றைக்கும் நமக்கு ப்ரஸாதிக்கிறான். தம்முடைய ஆசாரியரான எம்பெருமானாரின் அர்ச்சாத்திருமேனியை அனந்தாழ்வான் திருமலையில் ப்ரதிஷ்டை செய்வித்து, ஆசார்ய பக்தியை நிலைநாட்டிய பெருமையின் காரணமாகத் திருமலையில் எம்பெருமானாரின் திருவடி நிலையை 'அனந்தாழ்வான்' என்றே வழங்கப்படுகிறது. ஆக அனந்தாழ்வான், திருமலையில் வேங்கடவன் சந்நிதியில் எம்பெருமானார் திருவடிநிலையாகவும், ராமானுஜ நந்தவனத்தில் மகிழ மரமாகவும் கீழ்த்திருப்பதியில் கோவிந்தன் ஸந்நிதியில் மதுரகவிகள் பக்கலில் அர்ச்சாரூபியாகவும் எழுந்தருளியுள்ளார். இவ்வாறு அவருடைய குணக்கடலில் ஒரு திவலையை அனுபவித்து நம்மை க்ருதார்த்தர்களாக ஆக்கிக் கொண்டோம்.

அனந்தாழ்வான் திருவடிகளே
சரணம்.

*

## விண்ணப்பம்

'ஸப்தகிரி'யில் வெளியிடப்படும் சமயச் சார்பான கட்டுரைகளுக்கு அளிக்கப்படும் சன்மானத்தொகை கணிசமாக உயர்த்தப்பட்டுள்ளது. ஆகவே கட்டுரையாசிரியர்கள் தொடர்ந்து தங்கள் முழு ஒத்துழைப்பினை நல்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

--ஆசிரியர்.

# ஆழ்வார்களும் அன்னமாச்சார்யாவும்

திரு. T.D. செல்வம் - ஏகாம்பரகுப்பம்.

வைணவத் திருத்தலங்களில் திருமலை எனப்படும் திருவேங்கடமலைக்கு ஒரு தனி சிறப்பு உண்டு. அம்மலையில் நித்திய வாசம் புரியும் திருவேங்கடமுடையான் ஆழ்வார்களுக்கு திவ்ய மங்களத் திருமேனியினைக் காட்டி அவர்களுடைய மயர்வை அறுத்து மதிநலம் அருளினான். மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் எம்பெருமானுடைய கல்யாண குணங்களிலே மூழ்கி ஆழுங்கால் பட்டு முத்து போன்ற தேனினும் இனிய திவ்ய பிரபந்தங்களை அருளிச்செய்துள்ளனர். அவற்றின் ஆழ்பொருள்களை அவனி அறியும்படி ஆச்சார்யர்கள் அறிவுறுத்திச் சென்றுள்ளனர். அவ்வகையிலே தெலுங்கு சமய இலக்கியத்தில், அன்னமாச்சார்யர் ஆழ்வார்களுடைய சிந்தனை ஓட்டத்தினையும், பக்தி மேம்பாட்டினையும் தவறாமல் தம் கீர்த்தனைகளில் காட்டியுள்ளார். இக்கட்டுரையால் ஆழ்வார்களுடைய பாசுரங்களில் பொதிந்துள்ள கருத்துக்களை அன்னமய்யா தன் கீர்த்தனையில் கையாண்டிருப்பதை அனுபவிக்கற்பாலது.




திருமலை திவ்ய தலத்தினிலே சாசுவதமாக எழுந்தருளி அங்கு வசிக்கின்றவர்களுக்கு உள்ளம் உவந்து அவர்களின் பாபத்தை போக்குகின்றுனாம் திருவேங்கடவன். அங்கு வேங்கடவன் குடிகொண்டுள்ளதால் அங்கு வசிப்போரும் தூய்மையுடையவர்களாகவும், நித்திய சுகம் அனுபவிப்பவர்களாகவும் கரும வினைக்கப் பார்பட்டவர்களாகவும், என்றும் அவன் நாமத்தை கூறிக் கொண்டு, தொழுது கொண்டிருப்பவர்களாகவும், பரஜ்ஞான வித்தகர்களாகவும், வாழ்கின்றனர் என்கிருர் பொய்கையாழ்வார்.

"வகையறு நுண்கேள்வி
வாய்வார்கள் நாளும்
புகைவிளக்கும் பூம்புனலும், ஏந்தித்-
திசை திசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும்
வேங்கடமே வெண்சங்கம்
ஊதியவாய் மாலுகந்த ஊர்"

அன்னமய்யாவோ இக்கருத்தினையே மிக அழகாக விளக்கியுள்ளார். இங்கு வசிப்பவர்கள் மிகவும் தூய்மையானவர்கள். நித்திய சுகம் அனுபவிப்பவர்கள். பரஜ்ஞான சம்பன்னர்களுக்கு அரிதல்ல மஹைஸ்வரியங்கள் என்கிருர் இப்பாடலில்.

"நிர்மலுலு வீரு நித்திய சுகுலு
கர்ம தூருலு விஷ்ணு
கைங்கர்யபருலு
பரம ஜ்ஞான சம்பன்னு லகுவாரிகினி
அருது காதிசடி மஹைஸ்வர்யமு
ஹரிக்ருபாதனமு சே நப்பின
மஹாத்முலகு

*சரகு காகுண்டு பஞ்சல*
*நிதானமுலு"*

*"பலிமினி வேதாந்த பட்ட-*
*பத்ருலகு நில*
*பலு ராஜ்ய பதவுலிருகட பன்ட்லு*
*லலி மீரி ஹரி சக்ர லாஞ்சனபு*
*சூருலகு*
*யெலமி விஜயமு லெல்ல*
*நின்டி லோ நுண்டு"*

*"ஈவலனு ஸ்ரீவெங்கடேசு சரணுகதுல*
*காவடிஞ்சின புன்ய மடுவு காது*
*தைவ ஜ்னுலைன யா தர்ம*
*ஸ்வரூபுலகு*
*வே வேலு போகமுலு*
*வெனுதகுலு சுன்டு"*

நித்திய சூரிகளுக்கும், மற்றவர்களுக்கும் இடைவிடாத தூண்டுதலை செய்யும் திருவேங்கடவனை அறிவது கடினம் அவனது பெருமையையும், எளிமையும் எளிதாக அறியமுடியாது.

திருமலையில் திகழும் அப்பரம்பொருள் எங்கும் நிறைந்து அனைத்தும் கடந்தவன். அனைத்து தெய்வங்களும் அவனுள் அடங்கியது. அனைத்து வேதங்களும் அவனே, வேதப்பொருளும் அவனே என்கிறார் பேயாழ்வார்.

*"இறையாய் நிலனாகி எத்*
*திசையும் தானாய்*
*மறையாய் மறைபொருளாய்*
*வானாய்ப் - பிறைவாய்ந்த*
*வெள்ளத்தருவி விளங்கொலி நீர்*
*வேங்கடத்தான்*
*உள்ளத்தினுள்ளே உளன்"*

அவனது போக்கை ப்ரம்மனும் அறியான், மும்மூர்த்திகள் வணங்கி வழிபடும் பரமன் அவன். அவன் திருவிளையாடலை யாரும் அறியார். அவன் எங்கும் நிறைந்தவன் எல்லா உருவங்களும் அவனே என்று பேயாழ்வார் பாட்டில் காணலாம்.

இக்கருத்தினை திருமழிசை பிரான் தான் அருளிச்செய்த நான்முகன் திருவந்தாதியில்

*"சென்று வணங்குமினோ சேணுயர்*
*வேங்கடத்தை*
*நின்று வினை கெடுக்கும்*
*நீர்மையால் - என்றும்*
*கடிக்கமல நான் முகனும்*
*கண் மூன்றத்தானும்,*
*அடிக்கமலமிட்டேத்தும் அங்கு"*

*"மங்குல் தோய் சென்னிவட*
*வேங்கடத்தானைக்*
*கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான்*
*திங்கள்*
*சடை யேற வைத்தானும்*
*தாமரை மேலானும்*
*குடை யேறத் தாங்குவித்துக்*
*கொண்டு"*

என்று பாடியுள்ளார்.

அன்னமய்யாவோ திருவேங்கடவனின் திருவிளையாடலை யார் அறிவார் என்கிறார். சத்தியலோகமே தன் நாபியில் யிருக்க தேவகியின் கருப்பையில் கண்ணனாக ஏன் வளர்ந்தான்? பாற்கடலே தான் பள்ளிகொள்ளும் இடமாக இருக்க பாலுக்கும், வெண்ணைக்கும் ஆயர்பாடியில் திரிந்து அலைய வேண்டிய நோக்கமென்ன? தேவாதி தேவர்களும் மும்மூர்த்திகளும் இவனை வழிபடும் போது பலராமனை வழிபடக் காரணம் என்ன? இவை அனைத்துக்கும் பதில் அவனன்றி வேறொருவர் தரயியலாது என்கிறார்.

*"அனுசு போகட சொச்சே ஏதே*
*பிரம்ஹாதுலு மிண்ட*
*மொனசி ஈ பாலுனிகி மொக்கேமு*
*மேமு*
*உன்னத லோகமுலு உதரான*
*நுண்டுவாடு*
*அன்னுவ நீ தேவகி கர்ப்மந்து*
*புட்டேனு*
*மன்னிஞ்சி யோகீந்துருல மதிலோ*
*நுன்டெடுவாடு*
*பன்னின பொத்துலோன பாலுடை*
*யுன்னாடு*
*பால ஜலதி லோன பாயனி*
*கோவிந்துடு*
*பாலு வென்னலாரகிஞ்ச*
*பைடி கோரனு*
*வேலி தன விஷ்ணுமாய*
*நோலலாடி நட்டிவாடு*
*சாலி மந்த்ர சானுல சே ஜலக*
*மாடேனு*
*முகுரு வேல்புலகு மூலமைன*
*யிட்டிவாடு*
*தகு பலபத்ருனிகி தம்முடாயெனு*
*நிகிடி வைகுண்டமுன நிலிசி*
*ரே பல்லே நுண்டி*
*எகுவ ஸ்ரீவெங்கடாத்ரி*
*நிரவாய வீடே"*

ஆபத்து சமயங்களில் இறைவன் பல அவதாரங்கள் எடுத்து இப்புவியை உத்தாரணம் செய்துள்ளான். அவ்வகையில் முக்கிய அவதாரங்களாக இராமாவதாரம், கிருஷ்ணவதாரம் கருதப்படுகிறது. இறைவனே நற்காரியங்கள் நிகழ்த்துவதற்காக பலகாலம் புவியில் வாழ்ந்ததாக கூறப்படுவது அவதாரங்களாகும். (அவனை) வேங்கடத்தானை இராமனாக நினைத்து அவன் திருவுருவத்தை தரிசித்து பாடியுள்ளார் பூதத்தாழ்வார். சென்றது வீறுகொண்டு இலங்கைக்கு அங்கு கொன்றது இராவணனை பிறகு நின்றது திருமலைமேல் என்று பூரிப்புடன் வர்ணித்துள்ளார்.

*"சென்றது இலங்கைமேல் செவ்வே*
*தன் சீற்றத்தால்*
*கொன்றது இராவணனைக்*

கூறுங்காள் நின்றதுவும்
வேயோங்கு தண் சாரல்
வேங்கடமே விண்ணவர்தம்
வாயோங்கு தொல்புகழான்வந்து"

பொய்கையாழ்வாரோ மாரீச னாகிய மாய மானைப்பின் தொடர்ந்து அம்பு தொடுத்த இராமபிரான் வசிக்கும் தலம் என்று வருணிக்கிறர்.

"படையாரும் வாட்கண்ணர் பாரசி
நாள் பைம்பூந்
தொடையலோடு ஏந்திய தூபம்-
இடை இடையில்
மீன்மாயமாகூணும் வேங்கடமே
மேலொரு நாள்
மான் மாய வெய்தான் வரை"

அன்னமய்யாவும் இவர்க ளின் வழியையே கடைப்பி டித்து வேங்கடவனை இராம னாக கண்டு இராமாயணத்தை ரத்தின சுருக்கமாக பாடியுள் ளார்.

"நாருடா இதடு
ஆதிநாராயணடுகாக
தரணி கீரிதி கெக்கே தசரதசுதுடு
ஈதடா தாடகி சம்பே நீ மாரீச
சுபாஹுல
நீதடா மதமனசே நிந்தரு சூட
யேதுலகு ஹருவில்லு யீதடா
விரிசியட்டே
சீத பெண்டிலி யாடெனு
யீ சின்ன ராமுடா
சுப்புநாதி முக்கு கோசி சோதிஞ்சி
தைத்யுலசம்பி
அப்புடிட்டே வாலி நேசி நாதடிதடா
குப்பிஞ்சி கோதுல நேலி கொண்டல
ஜலதீ கட்டி
கப்பிலங்க சாதிஞ்சே யீ கௌசல்யா
நந்துனுடா
இராவணுதுல சம்பி ரக்ஷிஞ்சி
விபீஷனுனி
பாவிஞ்ச யோத்ய நீதடு பட்ட
மோலெனு
ஸ்ரீவேங்கடேஷுடிதடே ஸ்ருஷ்டி
ரக்ஷஞ்சே நிதடே
யீவலமாபாலநுன்ன ராமசந்துருடா"

திருவேங்கடவனை கண்ண னாக நினைத்து அவன் திரு விளையாடலைப் பாடினார்கள் ஆழ்வார்கள். பூதத்தாழ்வாரோ திருவேங்கடமுடையானே கண் ணன் என்றும், அவன் தேவாதி தேவனுமானவன் என்றும் பாடி, ஆனந்தமடைகிறர். அவன் இடந்ததோ பூமாதேவி, எடுத் ததோ கோவர்த்தன கிரி கொன் றது கஞ்சனை, நீரோட மாக டலில் ஆலிலையில் கிடந் தது கடைசியாக இக்கலியுகத் தில் வேங்கடவனாக நின்றது திருமலையில் என்கிறர் பொய் கையாழ்வார்.

"இடந்தது பூமி எடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனை முன்னஞ்சக்
கிடந்ததுவும்
நீரோதமாகடலே நின்றதுவும்
வேங்கடமே
பேரோத வண்ணர் பெரிது"
(பொய்கையாழ்வார்)

அன்னமாச்சார்யார் இவர்க ளின் வழியிலேயே கண்ண னின் திருவிளையாடலை பல பாடல்களில் பாடி மகிழ்ந் துள்ளார். திருவேங்கட வனை கோவிந்தனாகவே வழிப் பட்டார். அவனை கும்பிட் டாலே காப்பாற்றுபவன் என்கி றர்.

"கொலிசிதே ரக்ஷிஞ்சே
கோவிந்து டிதடு
யிலகு, இலக்ஷ்மி கீ மகடி
கோவிந்து டிதரு
கோவர்த்தனமெத்தி நட்டி
கோவிந்து டிதடு
வேவேலு கொல்லெதல
கோவிந்து டிதடு
கோவதுடை அலகாசே
கோவிந்து டிதடு
ஆவல கம்சு சம்பின ஆ
கோவிந்து டிதடு
வீர சக்ராயுதட கோவிந்து டிதடு
கோரி சமுத்ராலு தாடே
கோவிந்து டிதடு
ஆரீதி பாலுர தெச்சே யா
கோவிந்து டிதடு
குந்தனபு காசதோடி
கோவிந்து டிதடு
விந்துல ரேப்ல்லே கோவிந்துடிதடு
பொந்தி ஸ்ரீ வெங்கடாத்ரி பை
பொசக திருபதிலோ
அந்தமை பவ்வலிஞ்சின
ஆ கோவிந்து டிதடு"

இத்தலத்தில் ஆழ்வார்களே யன்றி தெலுங்கு மொழியில் வாக்கேயகாரர்களில் முதன்மை வகித்த அன்னமாச்சார்யார் பல ஆயிரக்கணக்கான பாடல்களில் இறைவனை பல்வேறு வடி வங்களாக பாடி மகிழ்ந்துள் ளார். இறைவனை நாம் அடை யும் வழிகள் ஒன்பதுள்ளது என்று ஸ்ரீமத்பாகவதத்தில் பிர கலாதன் வாயிலாக நாம் அறி வோம். அவை:

"சிரவணம், கீர்த்தனம் விஷ்னோ:
ஸ்மரணம் பாத சேவனம்
அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம்
சக்யம், ஆத்ம நிவேதனம்
இதி பும்சார்ச்சிதா விஷ்நௌ
பக்தி ஸ்சேந்நவ லக்ஷ்ணு
க்ரியதே பகவத் யத்தா தன்
மன்யே உத்தமுத்தமம்"
-(பாகவதம்)

இவ்வொன்பது வழிகளில் ஒன்ருன கீர்த்தனம் என்ற வழியினில் திருவேங்கடவனை வழிப்பட்டு பாடி பரவசமடைந் தார் அன்னமய்யா. அவன் திரு வடிகளில் சமர்ப்பித்த பாடல் களோ நாலாயிரத்திற்கும் மேலா னவை. திருவேங்கடவனின் மகி மையை சுந்தரத் தெலுங்கி னில், எளிய நடைமுறையில் நமக்களித்து பகவத் சன்னிதா னத்தை உணர்த்தியது. திருமா லின் திருஉருவத்தை தெளளத் தெளிவாக பிரதிபலிக்க செய் தது. அந்த உயர்ந்த மலை யின் புகழையும், மாசற்ற ஒளி வீசும் வேங்கடவனின் அருளை ஆழ்வார்களும் அன்னமாச்சார் யாவும், அவரவர் பாணியில் நமக்கு வேங்கடவனை காட்சி பெறச் செய்ததற்கு அவர்களின் திருவடியில் அஞ்சலி செலுத்து வோமாக.

* * *

# உய்விக்கும் உடையவர்!

திரு. சதயன் - காஞ்சிபுரம்.

உலக உயிர்களுக்குப் பயன்படும் எந்த ஒன்றும் நிலைத்து நிற்கும். அதுபோலவே, உலக சமுதாயத்துக்குப் பயன்படும் எவர் ஒருவரும் என்றும் போற்றப்படுவர்.

சமயம், நாடு, மொழி என்று பாடுபட்டவர் எவரும் சமுதாயத்தால் என்றும் மதிக்கப்படுகின்றனர்.

ஆதிசங்கரர், இராமாநுசர், மத்வர் எனப் பெயர்பெறும் இம்மூவரும் இன்று வரையும் மக்களால் போற்றப்பட்டு வணங்கு தற்குரியவராகத் திகழ்கின்றனர்.

இவருள்ளும் இராமாநுசர் சமயப் புரட்சியைச் செய்து, அதில் வெற்றியும் கண்டவர். இவருடைய கொள்கைகள் இன்றுவரையும் நிலைத்து நின்று மக்களை வாழ்விக்கின்றுர். சமயத்துறையில் தன்னுடைய அணுகுமுறைகளாலும், அருள் நெறிகளாலும் உலக மக்கள் அனைவரையும் உய்விக்கும் உடையவராக இராமாநுசர் உலக அரங்கில் உலவி வருகிறுர்.

இராமாநுசரின் சமய நெறிக் கொள்கை விசிஷ்டாத்வைதம் எனப்படும். வைணவ சமயத்தைச் சார்ந்தவர்க்கே அன்றி, உலக மக்கள் அனைவர்க்கும் இவரின் கொள்கைகள் வழிகாட்டி வாழ்கின்றன.

இராமாநுசரின் கொள்கைகள் அறிவு பூர்வமானவை, அனைவராலும் பின்பற்றுவதற்கு எளிமையானவை; உலக உயிர்களை உய்விக்கும் உயிர்ப்புத்தன்மை உடையவை; இறவாப் புகழுடையவை.

இராமாநுசர் நம் அனைவர்க்குமே உரிமையுடையவர். எனவே, அவரை நாமும் உடையவர் என்னும் திருப்பெயராலேயே வழங்குவோம்.

சமயத்துக்கும், சமுதாயத்துக்கும், மொழி உணர்வுக்கும், மனித நேயத்துக்கும், நட்புச் சிறப்புக்கும் எடுத்துக்காட்டாக உடையவர் வாழ்ந்தார்.

சமதர்ம நிர்வாகப் பொதுவுடைமைப் பண்பு; பிறருடன் கலந்து வாழும் போக்கு; குருவிடம் சீடன் நடந்து கொள்ளும் முறை; அடக்கம்; மரியாதை; குருகுலப் பயிற்சி; திருப்பணிச்சிறப்பு; நூற்பயிற்சி; உரை வளம்; முதலியன இவர் வாழ்வைத் தெய்வநிலைக்கு உயர்த்தின.

குருபரம்பரையாகிய முத்தாரத்திற்கு உடையவர் நடுநாயகக் கல்லாய்த் திகழ்கிறுர். குருமார் ஐவரிடம் பயின்ற சிறப்பு இவருக்குண்டு. எனினும், உடையவரே, இன்று அனைவருக்கும் குருவாகத் திகழும் பெருமைக்குரியவராகத் திகழ்வதனைக் கண்டு வணங்குகிறேம்.

உடையவரின் கருணைத் திறம் ஆண்டவனின் கருணையைவிட உயர்ந்தது என்பர். உலக மக்கள் அனைவரும் உய்ய வேண்டும் என்னும் பரந்த நோக்கம் இவர்பால் காணப்பட்டது.

உடையவர் உத்தமமான யோக புருஷர்; மிகச்சிறந்த தெய்வத்தன்மை வாய்ந்தவர். மகத்தான கடவுள் நெறியை மக்கள் எளிதில் அடையும் வண்ணம் போதித்த மாபெரும் தெய்வீகப் பேரின்ப வள்ளல்!

மாபெரும் யோக சாத்திர விஞ்ஞான ரஹஸ்யங்களை மக்களுக்குப் பரிவுடன் உபதேசித்த மகா புருஷர்.

கோவில் திருப்பணிகள், குளம் வெட்டுதல், கோபுரம் கட்டுதல், மடாலயங்களை நிர்மாணித்தல் முதலான கலைகளில் தேர்ச்சி அடைந்த வித்தகர்.

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவர். மாறுபட்ட மனித உணர்ச்சிகளுக்கு இடம் தராமல் சமதர்மத்தைத் தம் வாழ்க்கையுடனே பொருத்திக் காட்டிய பேரருளாளர்!

அதேநேரத்தில் சம்பிரதாயப்படி வாழும் வாழ்க்கை நெறியையும் வகுத்தருளியவர்!

குருவுக்கே விளக்கம் அளிக்கும் புலமை இவர்பால் காணப்பட்டது. யாதவப்பிரகாசர் என்பவரே இவரின் முதல் குரு. இவரிடம் உடையவர் உபநிடத பாடம் கேட்டறிந்தார். அவ்வாறு பயின்றுவரும் சமயத்தில் குருவின் விளக்கஉரையில் தவறு கண்டு எடுத்துக்காட்டும் திறமை பெற்றிருந்தார். ஆயினும், அடக்கமாகவும்

அமைதியாகவும், பொருள் கூறி வணங்கி நிற்பார். குருவை விஞ்சிய சீடனாயினும், சீடனுக் குரிய இலக்கணம் இவர்பால் குறைவின்றிக் காணப்பட்டது.

சமயப் புலமை மிக்க உடை யவரிடம் சாதிவெறி ஒருபோ தும் இருந்ததில்லை. திருக்கச்சி நம்பி என்பவர் இவர் குருமார்க ளுள் ஒருவர். நம்பிகள் வைசிய குலத்தவர். உடையவர் பிரா மண இனத்தவர். எனினும் திருக்கச்சி நம்பிகள் பால் உடை யவருக்கிருந்த குருபக்தி மிக உயர்வானது.

'எந்நன்றி கொன்றூர்க்கும்
உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு'

என்பார் திருவள்ளுவர்.

நன்றியுணர்வில் மிகச்சிறந்து விளங்கினார் உடையவர் என்ப தற்குப் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. அவற்றுள் ஒன்றை இங்கே நினைக்கலாம். திரு வரங்கத்திருகோயில் நிர்வாகப் பொறுப்பினைத் திருக்கோயில் முதலிகளும், உடையவரின் குரு மார்களுள் ஒருவரான பெரிய நம்பி என்பவரும் உடையவரி டம் ஒப்படைத்தனர்.

அப்போது, திருவரங்கப்பெரு மானே தம் தாமரைக் கண்க ளால் உடையவரை நோக்கித் திருவாய் மலர்ந்தார்.

"உடையவரே! இகபர செல் வங்களை உமக்கும் உம் உடை யாருக்கும் இப்பொழுதே தந்த ருளினோம்! இன்று முதல் நீர் இக்கோவில் செல்வங்களுக்கும் 'உடையவர்' என்னும் உரிமை யும் பட்டமும் பெற்று விளங் குவீராக! நம் கோவில் செல் வங்களை எல்லாம் ஆராய்ந்து நடைமுறைச் செயல்களை மேற் கொள்ளுவீராக!" என்று அரு ளாணையும் பிறப்பித்தார்.

உடையவர் உள்ளம் உவந்தார். திருவரங்கனின் அருட்பார்வை கிட்டியதற்குத் தம் குருவாகிய பெரிய நம்பிகளின் திருவடித் தொடர்பே காரணம் என்று எண்ணினார்.

எனவே, பெரிய நம்பிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி உடையவர் தம் நன்றிப் பெருக் கினை வெளிப்படுத்தினார்.

திருக்கோவில் நிர்வாகப் பொறுப்பை ஏற்போர் எவற்றை யெல்லாம் மனதில் கொள்ள வேண்டும்? எத்தகைய மன நிலையோடு பணிசெய்யவேண் டும் என்பதற்கு உடையவரின் நிர்வாகத்திறன் சிறந்த எடுத் துக்காட்டாகும்.

திருவரங்கத்திருகோவில் நிர் வாகத் தலைமைப் பொறுப்பை உடையவர் ஏற்றூர். திருக்கோ வில் முதலிகளிடம் திருக்கோவி லில் காணப்படும் குறைநிறைக ளைக் கேட்டறிந்தார்.

முதலில் கருவூலங்கள் அனைத்தையும் ஆராய்ந்து கணக்கெடுத்தார். இருப்புக் கேற்பச் செலவினங்களை வரை யறை செய்தார்.

அமுதுபடி, சாற்றுப்படி, திரு மாலை திருவிளக்கு முதலிய னவற்றுக்கு ஆகும் செலவி னத்தை வரையறை செய்தார்.

திருவாராதனத்துக்கு வேண் டிய நிதியை ஒதுக்கினார். இவை அனைத்தும் குறை வின்றி நடக்கிறதா என்றும் கண்காணித்து வந்தார்.

அவரவர் திறமை, புலமை, ஈடு பாடு முதலானவற்றை அறிந்து, அவரவர் தகுத்திக்கேற்பப் பணிகளை ஒப்படைத்தார்.

திருமதில், தரை முதலா னவற்றின் திருப்பணிகளைத் தாமே மேற்கொண்டு செம்மை யுற நிறைவேற்றினார்.

செண்பகம் முதலான மணம் தரும் மலர்கள் பூத்துக்குலுங் கும் நந்தவனத்தை உண்டாக்கி னார்.

திருவரங்கப்பெருமானுடன் தொடர்புடைய திருத்தலங்களை எல்லாம் ஆராய்ந்து அறிந் தார். அத்திருத்தலங்களில் செய் யவேண்டிய திருப்பணிகளையும் குறைவறச் செய்து முடித்தார்.

நிர்வாகத்தில் பல இனத்தவ ரும் பங்கு கொள்ளுமாறு செய் தார். ஆயிரம் ஆண் டுகளுக்கு முன்னர் திருக்கோ வில் நிர்வாகத்துக்கு வழிகாட் டியாக அமைந்த உடையவரின் திறமை இன்றும் பொறுப்பை ஏற்போருக்குக் கலங்கரை விளக் கமாக இருந்து வருகிறது. எந்த ஒரு சிறுமாற்றமும் இவர் மேற்கொண்ட நடைமுறையில் காண முடியாதவாறு நிர்வா கச் சிறப்பினை நமக்கெல்லாம் அருளி உய்வித்தவர் உடைய வர்!

தனக்குத் துன்பமே வரினும் பிறர் இன்பமே பெரிது என்று வாழ்ந்தவர் உடையவர்.

திருக்கோட்டியூர் நம்பி என்ப வர், சிறந்த ஆசார்யர். அவ ரிடம் சென்று திருமந்திரம், சரமஸ்லோகம் முதலியனவற் றின் நுண்பொருள்களை எல் லாம் அறிந்து வந்து உலகை உய்விக்க வேண்டும் என்று பெரிய நம்பிகள் உடையவரைக் கேட்டுக் கொண்டார்.

பதினேழுமுறை உடையவர் திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று வந்தார். ஒவ்வொரு

முறையும் ஒவ்வொரு செய்தி யைச் சொல்லி நம்பிகள் உடை யவரைத் திருப்பி அனுப்பி னார்.

மனம் தளராமை, கற்றலில் ஆர்வம், பொறுமை முத லான நற்பண்புகள் உடைய வர் பால் அமைந்திருத்தலைக் கண்ட நம்பிகள் பதினெட்டாம் முறை ரஹஸ்யார்த்தங்களைக் கூற மனம் இரங்கினார்.

உடையவருக்கும், அவருடைய சீடர்களாகவும் அன்பர்களாகவும் இருந்து வந்த கூரத்தாழ்வான் முதலியாண்டான் ஆகிய இரு வருக்கும் அரும் பொருள் கூறத் தொடங்கினார். அதற்கு முன் நம்பிகள் இம்மூவருக்கும் நிபந் தனை ஒன்றையும் விதித்தார்.

தாம்கூறும் திருமந்திரத்தின் உட்பொருள்களை வேறுயாருக் கும் உபதேசித்தல் கூடாது. அப்படி உபதேசித்தால், குருத்து ரோகம் வந்து உங்களைச் சேரும் என்று கூறியபின்பே, நம்பிகள் உபதேசிக்கத் தொடங்கினார்.

உடையவரும் அவ்வாறே உறுதி மொழி அளித்தார். பெறு தற்கரிய செல்வத்தைப் பெற் றவர் போல, நம்பிகளின் உரை கேட்டு உடையவர் பேரின்பம் எய்தினார். பணிந்து வணங்கி விடைகொண்டார்.

மறுநாள் வந்தது. திருக் கோட்டியூரிலுள்ள பெருமாள் கோவிலை உடையவர் அடைந் தார். கோபுரத்தின்மேல் ஏறி னார்.

“ஆசையுடையோர் அனைவ ரும் வருக! இதுவரை ஓரான் வழியாகவே உபதேசித்து வந்த நாராயணமந்திரத்தின் உட்பொ ருளை அன்பர்கள் அனைவர்க் கும் எடுத்துச் சொல்லப் போகி றேன்!” என்று உரக்கக்கூவி அழைத்தார்.

வைணவர்கள் திரண்டனர். ஆர்வமுடன் வந்தவர்க்கெல் லாம் திருமந்திரத்தின் திவ் யார்த்தத்தை உரக்க எடுத்து ரைத்தார். பிறவிப் பயனைப் பெற்றவர் போல, பெரிதும் மகிழ்ந்தார்.

இச்செய்தியை நம்பிகள் கேட்டு ஓடோடி வந்தார்.

“திருவெழுத்து மந்திரத்தைத் தெருவிலா உரைப்பது? இது என்ன விபரீதம்? குருவின் வாக் கினை மீறிவிட்டீரே! இதனால் உமக்கு என்ன பாபம் வந்து சேரும் தெரியுமா?” என்று நம் பிகள் உடையவரைக் கடிந்து நின்றார்.

உடையவர் அமைதியுடன் பதில் கூறினார்.

“ஆசார்யரே! இதுநாள் வரை மூடிமூடி வைத்திருந்த எட்டெ ழுத்து மந்திரமாகிய நாரா யண மந்திரத்தை நாட்டோர்க் கெல்லாம் எடுத்துக்கூறி விளக் கியது உண்மையே! குருவின் வாக்கையும் மீறினேன். இத னால் என் ஒருவனுக்கே நரகம் கிட்டும். ஆனால், இதனைக் கேட்டறிந்த நாட்டோர் எல்லாம் பேரின்பம் பெற்று உய்ந்தனரே! இது ஒன்றே எனக்குப்போ தும்!” என்று பணிவுடன் கூறி நின்றார்.

உடையவரின் பரந்த உள்ளத் தைக் கண்டு நம்பிகள் நெஞ்சம் உருகினார். நாதழுதழுத்தது. “எம்பெருமானாரே!” என்று கட்டி அணைத்துக்கொண்டார்.

தன்னை எரித்துக்கொண்டு மணம் வீசும் ஊதுபத்தியைப் போல, தன்னை வருத்திக் கொண்டு உலகத்தை உய்வித்த உடையவரின் பெருங்கருணை இன்று வரை உலகோவில் பாராட்டப்படுகிறது!

தீண்டாமை என்னும் பேயை விரட்டியடிக்க முதல் நடவ டிக்கை எடுத்தவர் உடையவரே! வாய்ச் சொல்லில் அன்றி, தம் வாழ்க்கையிலும் கடைப்பிடித் துக்காட்டினார்.

திருநாராயணபுரம் என்பது வைணவ திவ்ய தேசங்களுள் ஒன்று. அத்திருக்கோயிலின் உற்சவமூர்த்தி டில்லி சுல்தா னிடமிருந்தது. அம்மூர்த்தியை மீட்டுவரும் பொருட்டு உடைய வர் டில்லி சென்றார். சுல்தானி டமிருந்து மூர்த்தியைப் பெற் றுத் திருநாராயணபுரம் திரும் பிக் கொண்டிருந்தார்.

வழியில் கொள்ளைக் கூட்டத் தினர் உடையவரை வழிமறித் தனர். அப்போது அருகிலி ருந்த தாழ்த்தப்பட்ட இனத்தவர் ஓடோடி வந்தனர். கொள்ளை யரை விரட்டி அடித்தனர். பயணத்தை மேற்கொள்ள உத வினர். அவர்களின் மனித நேயத்தையும், கடவுள் பக்தி யையும் உதவி செய்யும் மனப் பான்மையையும், கண்டு நெஞ் சம் நெகிழ்ந்தார் உடையவர்.

நன்றி தெரிவிக்கும் முகமா கத் திருக்குலத்தார் என்னும் திருநாமத்தை அக்குலத்தார்க்கு வழங்கி மகிழ்ந்தார்.

சமயப்புரட்சியும் சமுதாயப் புரட்சியும் ஒரு சேர முதலில் செய்து காட்டியவர் உடையவர் ஒருவரே!

திருக்குலத்தரர் என்று அழைத்ததோடு நின்றுவிட் டாரா? தீண்டத்தகாதவர் என்று சமுதாயத்தால் ஒதுக்கி வைக்

கப்பட்டவர்களைக் கோவிலுள் சென்று இறைவனைத் தரிசிக்கவும் அனுமதி தந்தார். மக்களோடு மக்களாகக் கலந்து கல்யாணி தீர்த்தத்தில் நீராடும் உரிமையையும் வழங்கினார். அத்துடன் தீர்த்தம், பிரசாதம் முதலானவற்றையும் வழங்கி மரியாதையும் செய்தார்.

இந்தச் சீர்திருத்தப் பெருந்தன்மைக்கு உடையவரைத் தவிர வேறு எவரை எடுத்துக்காட்டாகக் கூறமுடியும்? இச்செயல்கள் என்றும் நிரந்தரமாக இருக்கவேண்டும் என்பதற்குச் சாசனமும் செய்துவைத்தார். பிராமணர், பிராமணர் அல்லாதார் என்னும் பேத நினைப்பே கூடாது என்பது உடையவரின் பரந்த சமய சமுதாயச் சீர்திருத்த வைபவங்கள்!

அறியாதன அறிவித்து, காட்டாதென காட்டிப் பேசாதன பேசுவித்து உலகுக்கு உய்யும் நெறியைக் காட்டியவர் உடையவர் ஒருவரே!

வியாச முனிவர் அருளியது பிரம்மசூத்திரம் என்னும் வேதாந்த நூல். இதற்கு விளக்கவுரை எழுதி முதலில் அருளியவர் ஆதிசங்கரர்.

பிரம்மசூத்திரத்திற்கு விசிஷ்டாத்வைத சாரமான விளக்க உரை எழுதி உலகுக்கு அளித்தவர் உடையவர் இவ்விளக்க உரை ஸ்ரீபாஷ்யம் என்னும் பெயரால் வழங்கப்பட்டு வருகிறது.

பகவானை அடையப்பகவானுடைய அருள்வழியே உபாயமாகும். பகவானிடம் பக்தி செலுத்தினால் மட்டும் போதும். சரணம் என்று பகவானின் திருவடிகளைப் பற்றிக் கொள்ளும் பிரபத்தி நெறியே சிறந்தது. பக்தியையும், சரணாகதியையும் அடிப்படையாகக் கொண்டு செய்யப்படும். கைங்கர்யமே பகவானுக்கு மகிழ்ச்சியைத் தரும். சமய வேறுபாடுகள் மனித வேறுபாடுகளுக்கு இடம் கொடுக்கக்கூடாது.

இத்தகைய பேரின்ப நெறியைப் புகட்டும் விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சி நூலே ஸ்ரீபாஷ்யம். இந்நூல் உலகினர் அனைவராலும் இன்று வரையும் பாராட்டும் பெருமைக்குரியதாக இருக்கிறது.

சமய ஆசார்யராக மட்டுமின்றி, சமுதாய சீர்திருத்த வள்ளலாகவும் திகழ்ந்தவர் உடையவர். இவர் அருளிய விசிஷ்டாத்வைதக் கொள்கைகள் உலகையே உய்விக்கும் கருத்துகள் நிறைந்தவை.

நல்லொழுக்கமும், முன்னேற்ற வழிபாடுகள் பொதுப் பணிகளில் சமத்துவம், நிர்வாகப் பொறுப்பில் உள்ளவர்களின் தகுதிகள், தாழ்த்தப்பட்டோர் என்பவரையும் மனித நேயத்துடன் அணுகி மனித உரிமையை வழங்கிய மாண்பு, குருகுலச்சிறப்பு, குருபரம்பரையைத் தோற்றுவித்து நடத்திய பாங்கு, எளிய வழிபாட்டு முறை, பேரறிஞர்களும் அறிவியலாரும் வியந்து போற்றும் சமய உன்னதப் பண்பு முதலான உயர்நிலைகளின் மொத்த உருவம் உடையவர்.

கூப்பிய கைகளுடனும், கம்பீர உருவத்துடனும், கருணை ததும்பும் முகமலர்ச்சியுடனும் காணப்படும் உடையவரின் விக்கிரக மூர்த்தி காண்பவரை ஈர்க்கும் காந்த சக்தியும், தெய்வ ஆற்றலும் கொண்டது.

120 ஆண்டுகள் உலகில் வாழ்ந்து, உலகோர்க்கு உய்யும் நெறியைக் கூறி அருளிய உடையவரின் வாழ்க்கை உலகுக்கே எடுத்துக்காட்டு.

உடையவரின் வழிநின்று ஒழுகுதலே, இன்றைய உலக நிலைக்குத் தகுந்த தீர்வாகும் என்பதில் ஐயமே இல்லை.

வாழ்க உடையவரின் திருநாமம்!

* * *

## வாசகர்களுக்கு......

இந்த இதழின் 'உங்களுடன்....' பகுதியில் (இரண்டாம் பக்க இறுதியில்) 'ஸ்ரீ பராசர பட்டரும்' என்று தவறுதலாக அச்சாகியுள்ளது அங்கு 'ஸ்ரீ கூரத்தாழ்வானும்' என்று இடம் பெறுவதே சரியாகும். தயவு செய்து 'ஸ்ரீ கூரத்தாழ்வானும்' என்று திருத்தி வாசிக்கவும்.

-ஆசிரியர்.

# அனுமன் எனும் தூதுவன்.....!!

உலகின் சிறந்த தூதுவர்களில் முதலிடம் அனுமனுக்கு! ராமாயணம் என்ற காவியம் நிறைவு பெற்றதே அனுமனால்தான். ராமாயணத்தில் அனுமன் மொத்தம் நான்கு முறை தூது செல்கிறான். தூதுவன் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கு அப்போதெல்லாம் அவன் முன் உதாரணமாய் நடந்துகொள்கிறான்.

அவனுடைய முதல் தூது சுக்ரீவனுக்காக ராமனிடம் நிகழ்கிறது. ராமனை வணங்கி போற்றி, எங்கள் அரசன் சுக்ரீவனை நட்பு செய்து கொண்டால், உங்களுடைய காரியம் வெற்றி பெறும் என உணர்த்துகிறான்!

இரண்டாவது முறையாக, ராமனின் தூதுவனாக சீதையிடம் இலங்கைக்கு செல்கிறான். அங்கு சீதையிடம் பேசும்போதும், அடக்கமாக 'இராமபிரானின் தூதுவன்' எனக்கூறி அறிமுகம் செய்து கொள்கிறான். பிறகு இந்திரஜித்தால் பிடிக்கப்பட்டு, இராவணன் முன் நிறுத்தப்படுகிறான். அப்போது அவனைப் பார்த்து ராவணன், 'நீ என்ன திருமாலோ, இந்திரனோ, பிரம்மனோ' என கேட்கும்போது பதிலுக்கு அனுமன் அடக்கமாக, ராமனின் தூதுவன் நான் எனக்கூறுகிறான்.

பிறகு இலங்கையிலிருந்து தப்பி ராமனை வந்தடையும்போது, சீதையின் தூதுவனாய்; அந்த பிராட்டி அளித்த மோதிரத்தை அளிக்கிறான் அனுமன்!

ராவணன் வதம் முடிந்து விடுகிறது. விபிஷணனுக்கு பட்டாபிஷேகம் செய்துவைக்கிறான் ராமன். அப்போதும் அவன் உடனே சீதையை சென்று பார்க்கவில்லை. மாறாக அனுமனை மீண்டும் சீதையிடம் தூது அனுப்புகிறான் எதற்கு? "தன்னுடைய வெற்றியைக் கூறி விரைவில் வருகிறேன்...." எனக்கூறு என அனுப்பிவைக்கிறான்.

நான்காவதாக ராமர், சீதை, லட்சுமணன், விபீஷணனுடன் அயோத்தி திரும்பிக்கொண்டிருக்கும்போது அங்கு பரதன், தன்னை இன்னமும், காணுமல் துடிப்பானே என்பதை உணர்ந்து, மீண்டும் அனுமனை, விரைவாக வந்து கொண்டிருக்கிறார்கள் எனக்கூற தூது அனுப்புகிறான். அண்ணன் வராததால் தீப்புக நினைத்த பரதனை தடுத்து, ராமன் வருகையை அறிவிக்கிறான் அனுமன். அப்போது பரதன், "ராமன் பாதுகையை எனக்கு அளித்தபிறகு நடந்ததைக்கூறு" எனக்கேட்கும்போது தான் இலங்கை சென்று சீதையை சந்தித்ததை தவிர்த்து மற்ற அனைத்தையும் கூறுகிறான் அனுமன். தன் புகழை தன் வாயாலேயே கூறக்கூடாது என்பதற்கு இதைவிட சிறந்த உதாரணம் தேவையோ?

சிறந்த தூதுவன் சிறந்த சிந்தனையாளனாகவும் திகழவேண்டும். தக்க நேரத்தில் தன்னுடைய தலைவனுக்கு பயன்தக்க யோசனையும் வழங்க வேண்டும்.

விபீஷணன், ராமனை சந்தித்து, சரணுகதி அடைய முயற்சிக்கும்போது, ராமன் தயங்குகிறான். அப்போது அனுமன், விபீஷணனின் உதவிக்கு வருகிறான், "இராவணன் என்னைக் கொல்லவந்தபோது, தூதனைக்கொல்லலாகாது என்ற நற்சொல்லை பகர்ந்தவன் இவன். மேலும் இவனுடைய மகளும் நல்லவள். சீதாபிராட்டிக்கு அசோகவனத்தில் உற்ற தோழியாய் அவள் தான் இருக்கிறாள்" எனக்கூற ராமன் விபீஷணனை ஏற்கிறான்.

சிறந்த தூதுவனை சிறப்பாக கவனிக்கவேண்டியது தலைவனின் கடமையல்லவா. ராமன் பட்டாபிஷேகம் செய்துகொண்டு, அனைவருக்கும் பிரியாவிடையாக பரிசுகள் அளித்து அனுப்பும் போது அனுமனையும் அழைக்கிறான். "உனக்கு என்ன பரிசு கொடுப்பது.. உன் உதவிக்கு ஈடு இணை இல்லை. ஆக பரிசாக... என்னையே அணைத்துக்கொள்" என்கிறான் ராமன்! அப்போதும் அடக்கத்தை கைவிடவில்லை. அனுமன் எனக்கு ஆலிங்கனம் வேண்டாம் மாறாக தங்கள் திருவடியே போதும் என்கிறான்.

ஆக ஒரு தூதுவன் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு முன்னுதாரணமாய் திகழ்கிறான் அனுமன். அதனால்தானோ...அவனுக்கும் ராமனுக்கும் மட்டுமே இன்று கோவில்கள் உள்ளன? தொண்டன் விசுவாசமாய் இருந்தால் தெய்வமாய் போற்றப்படுவான் என்பதற்கு அனுமனே மிகப் பெரிய உதாரணம்?

தொகுத்தவர் : திரு. ராஜி ராதா - திருச்சி.

# உறங்கா வில்லிதாசன்

திரு. பஞ்சு. அரங்கநாதன் - ஸ்ரீரங்கம்

## முன்னுரை :

ஸ்ரீ வைஷ்ணவத்தின் மகா மேதை. தலைசிறந்த ஞானி ஸ்ரீராமானுஜர் (கி.பி. 1017 to 1137) ஆவார். இவர் சகல உயிர்களையும் சமமாக நோக்கிய ஒப்பற்ற ஞானி. தமது மடத்திலிருந்து காவிரி ஆற்றுக்கு நீராடப்போகும் போது வயோதிக உடல்தள்ளாட்டம் காரணமாக முதலியாண்டானின் கையைப் பிடித்துக் கொண்டு செல்லுவார். ஆனால் நீராடி ஆசாரமாக மடத்துக்கு வரும் போது உறங்கா வில்லிதாசன் என்ற தாழ்ந்த குலத்தவன் தோளைப் பிடித்துக் கொள்வார். இப்படிப் பட்ட சிறப்புவாய்ந்த உறங்கா வில்லி தாசனின் வரலாறைக் காண்போம்.

## பிறப்பு :

ஸ்ரீரங்கத்திற்கு அருகே உள்ள நிசுளாபுரி என்னும் உறையூரில் பிற்பட்ட குலத்தில் பிறந்தவன் வில்லி. இவனுடைய முழுப்பெயர் பிள்ளை உறங்காவில்லிதாசன். இவன் சிறந்த மற்போர் வீரன். ஆகவே திருச்சிராப் பள்ளி அரசனுடைய அவையில் ஆஸ்தான மல்லனாக இருந்தான். எல்லாநாட்டு மல்லர்களையும் வென்று பெரும் புகழ் படைத்திருந்தான்.

## இல்லறம் :

வில்லிதாசன் அழகில் சிறந்த "பொன்னாச்சி" என்ற தாசியை மணந்து இன்பமாக வாழ்ந்து வந்தான். ஊரையே ஆட்டிப் படைத்த இந்த மல்லன் தன் மனைவியின் கண்பார்வைக்கு கட்டுப்பட்டு அடிமையாக விளங்கினான். வீட்டில் மட்டும் மனைவிக்கு பணிவிடை செய்து வந்த அவன் ஒருமுறை பொது இடத்தில் யாரையும் லட்சியம் செய்யாமல் பணிவிடை செய்தான். அதனால் அவன் வாழ்வே மாறியது.

## வசந்தோற்சவம் :

அப்பொழுது ஸ்ரீரங்கம் அருள் மிகு அரங்கநாதப் பெருமாளின் ஆலயத்தில் வசந்த உற்சவம் நடைபெற்றது. அந்த விழாவைக்காண பொன்னாச்சி வந்தாள். அவளுடன் அடிமையான வில்லிதாசனும் வந்தான். வெயில்படாமல் மனைவிக்கு குடைபிடித்தான். கூட்டம் காரணமாகத் தன் மனைவி அருகே நெருங்கி வந்தவர்களை பிடித்து தள்ளினான். தன் மனைவியின் அழகையே பார்த்துக் கொண்டு நின்றான். வீதி உலாவரும் பெருமானை தவறிக்கூட சேவிக்கவில்லை. பாகவதர்கள் மல்லனின் இந்த இழிசெயலைப் பேசி புலம்பினர். ஆனால் வில்லியோ எதையும் லட்சியம் செய்யாது மனைவியின் தொண்டிலேயே திளைத்து நின்றான். இதை அறிந்த ஸ்ரீராமானுஜர் அவனை அழைத்து விசாரணை செய்தார்.

## ஸ்ரீராமானுஜர் :

அப்பா நீ யார்? இங்கு எதற்கு வந்தாய்?

**வில்லி தாசன் :-** சுவாமி! நான் அரசாங்க மல்லன் என் பெயர் பிள்ளை உறங்காவில்லிதாசன். என் மனைவிக்கு துணையாகவும் அவளுக்கு பணிவிடை செய்யவும் இங்கு வந்தேன்.

**ஸ்ரீராமானுஜர் :-** அப்பா, அரசாங்கத்திலே பணிபுரியும் நீ பக்தர்கள் பலர் கூடி எம் பெருமானை தரிசிக்கும் போது மனைவிக்கு அடிமையாகி அவர்களைத் தள்ளிவிடலாமா? அநாகரீகமாக நடந்து கொள்ளலாமா?

**வில்லிதாசன் :-** சுவாமி! நான் நாகரீகம் தெரிந்தவன் தான். ஆனால் என் மனைவியின் கண்கள் பேரழகும், வசீகரமும், காந்த சக்தியும் உடையது. அந்தக் கண்களைப் பார்த்தவுடன் அடிமையாகி உலகையே மறந்து விடுகிறேன். என்னை மன்னியுங்கள்!

**ஸ்ரீராமானுஜர் :-** குழந்தாய்! உன் மனைவியின் கண்களை விட அதிக அழகும், ஆழமும், கருணையும் நிறைந்த கண்களைப் பார்க்கிறாயா? பார்த்தால் என்ன செய்வாய்?

**வில்லிதாசன் :-** சுவாமி! அப்படிக் கண்கள் இருக்குமானால் அதற்கு அடிமையாவேன். இது என் மனைவி மீது சத்தியம்.

## ஆலயம் செல்லல :

உடனே ஸ்ரீராமானுஜர் வில்லியை அழைத்துக் கொண்டு திருஅரங்கம் அருள்மிகு அரங்கநாதப் பெருமாள் முன்பு நிறுத்தி "வில்லி! அதோபார் பகவானின் கருணைக் கண்கள்" என்று காட்டினார். அரங்கனிடமும் வில்லிக்கு அருளப் பிரார்த்தித்தார். அரங்கனும் தனது கருணைக் கண்களால் வில்லியை நோக்கினான். வில்லியும் கண்டான். எவ்வாறு கண்டான்?

"குடதிசை முடியை வைத்து,
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டி, தென்திசை
இலங்கை நோக்கி
கடல்நிறக்கடவுள் எந்தை அரவு
அணைத்துயிலா கண்டு
உடல் எனக்கு உருகும்......"
[தொண்டர்அடிப்பொடியாழ்வார்]
[திருமாலைப் பாடல் -19]

அதுமட்டுமா? எந்த கருணைக்கண்களைக் கண்டால் மற்றொன்றினையும் காண வேண்டாம் என்று திருப்பாணாழ்வார் சொன்னாரோ அந்த ஆழ்வாரின் கூற்றுக்கு உதாரணமாக விளங்கினான் வில்லிதாசன்.

"கொண்டல் வண்ணனை,
கோவலனாய் வெண்ணெய்
உண்டவாயன் என் உள்ளம்
கவர்ந்தானை
அண்டர்கோன் அணிஅரங்கன்
அமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக்
காணாவே!"
(திருப்பாணாழ்வார்-அமலானாதி
பாடல் -10)

## துறவியாதல் :

அன்றுமுதல் உலக இன்பங்களை மறந்து, தன் மனைவியை மறந்து ஸ்ரீராமானுஜரின் அடிமையானான் வில்லி. அவன் மனைவியும் ஆசிரமம் சேர்ந்தாள். இருவரும் மடத்தின் பின்புறமே ஒரு குடியை போட்டுக்கொண்டு மடத்தின் சீடர்களாக வாழ்ந்தனர். தினமும் காலையில் எழுந்து மடத்தை முழுவதும் பெருக்குவது, நீர் ஊற்றி தூய்மை செய்வது. கோலம் போடுவது, பூக்கள் கட்டுவது, சமையல் பாத்திரங்கள் தேய்ப்பது போன்ற எல்லா வேலைகளையும் இலவசமாக தொண்டாக செய்தனர். அதே நேரம் சிறந்த ஸ்ரீவைஷ்ணவபக்தி ரத்னங்களாக விளங்கினர்.

## நீராட்டம் :

இப்படி உயர்ந்த பக்திரத்தினங்களாக விளங்கிய வில்லிதாசன், பொன்னாச்சி இருவரையும் மடத்துக்குச் சீடர்கள் சாதாரண வேலையாட்களாகவே எண்ணி வந்தனர். ஆகவே இவர்களின் பெருமையை உலகறியச் செய்ய ஸ்ரீராமானுஜர் எண்ணினார். தினமும் மடத்தில் இருந்து காவிரிக்கு நீராடச் செல்லும் ஸ்ரீராமானுஜர், போகும் போது முதலியாண்டான் தோளைப் பிடித்துக் கொண்டு செல்வார். ஆனால் நீராடிவிட்டு ஆசாரமாக வரும் போது வில்லிதாசன் தோளைப் பிடித்துக்கொண்டு மடம் திரும்புவார். ஆனால் இதன் மூலம் வில்லியின் உயர்வை மடத்துச் சீடர்கள் புரிந்து கொள்ளாமல் ஸ்ரீராமானுஜர் சாதி சம்பிரதாயங்களை மீறி தாழ்ந்த குலத்தவன் மீது சாய்ந்து வருகிறார் என்ற புகார் கிளம்பியது.

## சீடர்களின் சிறுமை :

மேற்கண்ட வகையில் வில்லிதாசனின் உயர்வை உணராத சீடர்களுக்கு வேறு வகையில் காட்டிட விரும்பினார் ஸ்ரீராமானுஜர். ஆகவே ஒரு நாள் நீராடிவிட்டு துணி காயவைத்திருந்த போது எல்லா சீடர்களின் துணியில் இருந்தும் ஒரு சாண் துணியை கிழித்து எறிந்துவிட வில்லிக்கு உத்தரவிட்டார். அவனும் அவ்வாறே செய்தான். பிறகு வந்து துணி கிழிந்திருப்பதைக் கண்டு மிகவும் கோபப்பட்டு அநாகரீகமாக பேசி வைத்தனர். ஸ்ரீராமானுஜர் கூப்பிட்டு விசாரித்து துறவிகளே இப்படிச் செய்யலாமா? என்று கண்டித்தார்.

**வில்லியின் உயர்வு :** ஒரு சாண் துணிக்கே ஊரைக் கூட்டிய இரண்டு சீடர்களைப் பார்த்து ஸ்ரீராமானுஜர் "மடத்தில் பணமில்லை. பொன்னாச்சி அணிந்த தங்கக் கொலுசுகளைக் கொண்டு வந்தால் நல்லது. வில்லியைப் பற்றிக் கவலைவேண்டாம்" என்றார். அன்று இரவே சென்று ஒரு கொலுசை கொண்டு வந்தனர். மற்றொன்று அவள் விழித்ததால் முடியவில்லை என்றனர்.

**விசாரணை :** இந்நிகழ்ச்சிக்கு ஒருவாரம் கழிந்த பிறகு ஒரு நாள் மாலை ஸ்ரீராமானுஜர் தலைமையில் அவை கூடியது. சோர்வாக ஒரு மூலையில் நின்ற வில்லிதாசனை அழைத்து ஸ்ரீராமானுஜர் காரணம் கேட்டார். வில்லியோ ஒன்றுமில்லை என்று மறுத்தான். உடனே ஸ்ரீராமானுஜர் வில்லியின் மனைவி பொன்னாச்சியிடம் விபரம் கேட்டார். அவள் கண்ணீர் விட்டு அழுதாள். ஸ்ரீராமானுஜர் உடனே இறங்கிவந்து மிகவும் பரிவுடன் ஆறுதல் சொல்லி விபரம் கேட்டார். பொன்னாச்சியும் தழுதழுத்த குரலில் சுவாமி! அவர் ஒருவாரமாக சாப்பிடுவதில்லை,

என்னிடம் பேசுவதும் இல்லை என்றாள்.

ஸ்ரீராமானுஜர் : ஏனம்மா அப்படி? உடல் நலம் இல்லையா?

பொன்னாச்சி : இல்லை சுவாமி! மூடி மறைத்த ஒரு சம்பவத்தை தங்களிடம் கூறுகிறேன். ஒரு வாரம் முன்பு ஒருநாள் இரவில் மடத்துப் பிராமணர்கள் இருவர் என்வீடு வந்து கதவை மெதுவாகத் திறந்து என் பாதங்களைப் பற்றி தங்க கொலுசு ஒன்றைக் கழட்டினர். நானும் சரி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு என்ன கஷ்டமோ என்று ஊரைக் கூட்டவில்லை. மற்றொரு காலிலும் கழட்டிக் கொள்ளட்டும் என்று புரண்டு படுத்தேன். ஆனால் அவர்கள் பயந்துகொண்டு சென்றுவிட்டனர். காலையில் என் காலில் கொலுசு இல்லாதது கண்ட வில்லி வினவினார். எல்லாவற்றையும் சொன்னேன். அது முதல் சாப்பிடுவதில்லை.

ஸ்ரீராமானுஜர் : ஏனப்பா வில்லி! ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏதாவது தவறு செய்திருக்கலாம். அதற்காக சாப்பிடாமல் மனைவியிடம் பேசாமல் இருக்கலாமா? நான் விசாரித்து அந்த தங்கக் கொலுசை வாங்கிக்கொடுத்து விடுகிறேன். கவலைப்படாதே.

பொன்னாச்சி : அய்யோ சுவாமி! வில்லி தங்கக்கொலுசைக் கொடுத்ததற்காக கோபப்படவில்லை. ஸ்ரீவைஷ்ணவர்களிடம் நான் மரியாதைக்குறைவாக நடந்ததற்காக கோபப்படுகிறார்.

ஸ்ரீராமானுஜர் : ஏனம்மா? அவர்கள் களவாடத்தானே வந்துள்ளனர். அவர்களை ஊரைக் கூட்டி அவமானப்படுத்தாமல் நீ விட்டதே பெரிது.

வில்லிதாசன் குறுக்கிட்டு: சுவாமி! அவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள். அவர்கள் எந்த நேரத்தில் எந்த நோக்கத்திற்கு வந்தால் என்ன? அவர்கள் தங்கள் மடத்துச் சீடர்கள். அவர்கள் வந்தது தெரிந்ததும் உடனே பொன்னாச்சி அவர்களை வரவேற்று, வணங்கி அவர்கள் எதைக்கேட்டாலும் தரவேண்டாமா? இந்த உடம்பும், உயிரும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உரியது அல்லவா? அவர்களை அவமானப்படுத்திய பொன்னாச்சி எனக்கு வேண்டாம்.

ஸ்ரீராமானுஜர் : ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்களே! பார்த்தீர்களா வில்லிதாசனின் உயர்வை. அவனுடைய தோளைப்பற்றிக் கொண்டு நான் வந்ததை குறை கூறினீர்கள். ஆனால் அவனுடைய தாச விருத்தியைப் பாருங்கள். ஒரு சாண் துணியைக் கிழித்ததற்கு நீங்கள் வேதம் சொல்லிய வாயால் அசிங்கமாகப் பேசினீர்கள். ஆனால் வில்லியோ ஒரு தங்கக் கொலுசை மட்டுமே தந்தாளா? எல்லாவற்றையும் அல்லவா தரவேண்டும் என்று மனைவியை கோபித்துக்கொண்டு ஒரு வாரம் பேசவில்லை. சாப்பிடவில்லை. இவனைவிட சிறந்த பாகவதன் யார்? இருந்தால் அவன் கைகளைப்பற்றி நீராடுகிறேன் கூறுங்கள்.

அனைவரும் மௌனம் சாதித்தல்.

முடிவுரை :

பிள்ளை உறங்காவில்லி தாசன் ஸ்ரீவைஷ்ணவ சரித்திரத்தில் முக்கிய இடம் பெறுகிறார். வாழ்க ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரை!

ஸ்ரீரங்கநாதபரப்ரஹ்மணே நம:

## இராவணன் மாட்சி

1) ஆட்சியின் மாட்சி.
2) தவ வலிப் பெருமை.
3) விபீடணன் அறிவுரை கேட்டு அனுமனைக் கொல்லாமல் விட்டது.
4) சீதை தூற்றியும் பொறுமையுடன் இருந்தது.
5) இந்திர சித்து இறந்தபின் சீதையைக் கொல்லத் துணிய, மகோதரன் சொல் கேட்டுத் தவிர்ந்தது.
6) மூவுலகங்களை வென்று அடிமைப்படுத்தியது.
7) சிறந்த சிவபக்தி.
8) அஷ்டதிக் கஜங்களை வென்றது.

தொகுப்பு: திரு. சதயன் - காஞ்சிபுரம்.

# சரணாகதியின் மகிமை

திரு. வரதாச்சாரி நரஸிம்ஹன் - சென்னை.

சரணாகதியின் மகிமையை நாம் முழுமையாகப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால், பரமாத்மா, ஜீவாத்மாவின் உட்கருத்தை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். வேதங்களில் கூறப்படுகின்ற பிரும்மத்தின் சூட்சுமத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். ஸ்ரீமந் நாராயணனே பரபிரும்மம். அவன் எல்லா உயிர்களிடத்திலும், பொருட்களிலும், இடங்களிலும் எப்போதும் இருப்பவன். அவனுக்குத் தோற்றம், மாற்றம், அழிவு என்பது எதுவும் கிடையாது. விருப்பு, வெறுப்புக் கிடையாது. அவன், 'ஸர்வ பிரக்ஞன்' எல்லாவித கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமானவன். அவனே பரமாத்மா! சேஷி என்றும் அழைக்கப்படுபவன்.

ஒவ்வொரு பிறப்பின் போதும், ஜீவனானது, (உடலில் தங்கியிருக்கும் பொழுது) அதனுடைய கர்ம வினைகளுக்கு ஏற்றவாறு பலாபலன்களை அடைய வேண்டியுள்ளது. அதாவது உடலோடு கூடிய ஜீவனானது, தர்ம காரியங்களைச் செய்தால் அதற்குண்டான பலனாக சொர்க்கலோகம், இந்திர லோகம், பிரும்மலோகம் முதலிய இவற்றையடைந்து சுகங்களைப் பெறுகிறது. அதர்மங்களைச் செய்தால் நரகத்தையடைந்து, துன்பத்தைப் பெறுகிறது. ஜீவாத்மா மலையளவு புண்ணியம் செய்தாலும், இம்மியளவு பாவம் செய்தாலும் இதன் பலன்களை அதே பிறவியிலேயோ, அல்லது மறு பிறப்பிலேயோ தனித்தனியாக அனுபவிக்க வேண்டியுள்ளது. இவ்வாறு ஜீவனானது, கர்ம வினைகளுக்கேற்றவாறு பாவ புண்ணியங்களை அனுபவிக்க, பிறப்பு, இறப்பு என்ற காலச்சக்கரத்தில் சுழன்று கொண்டேயிருக்கின்றது.

இதனையே திருவள்ளுவர், தம் திருக்குறளில் கீழ்க்கண்டவாறு கூறுகின்றார்.

"இருள் சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

இப்பிறப்பு, இறப்பு என்ற சக்கரத்திலிருந்து, ஜீவனானது விடுபட்டு, பகவானுடைய திவ்ய மங்கள விக்கிரகம் போன்ற அழகிய சரீரத்தைப் பெற்று, அவனுடன் கூடியிருந்து, எப்பொழுதும் அவனுக்குக் கைங்கர்யம் செய்யும் நிலையையே 'மோட்சம்' என்றழைக்கப்படுகிறது.

ஜீவன், மோட்ச நிலையையடைய வேண்டுமானால் பாவ புண்ணியங்கள் என்ற கர்ம பலன்கள் எதுவும் ஜீவனின் கணக்கின்றி (பூஜ்யமாக) இருத்தல் வேண்டும். இந்நிலையடைந்தவர்கள், 'பூஜ்யர்கள்' என அழைக்கப்படுவர். இவர்களே மோட்சத்தை அடைவார்கள். அரிய இந்நிலையை எளிதில் அடைவது என்பது எந்த ஜீவனுக்கும் சாத்யமன்று. அரிய இந்நிலை அடைய உடலில் தங்கிய ஜீவனானது, தன்னுடைய கர்ம பலன்களையெல்லாம், பகவானுக்கு அர்ப்பணம் செய்து, அவனே பரமாத்மா என்று முழுமையாக உணர்ந்து, பக்தியோடு அவனைச் சரணடைதல் வேண்டும். பிரும்மமான ஸ்ரீமந் நாராயணன், 'தான்', 'தனது' என்ற பற்றை விட்டு கர்வத்தையொழித்து, யாவற்றையும் தனக்கு அர்ப்பணித்து, அவனையே கதியென்று சரணடையும் ஜீவன்களை பூஜ்யராக்கி, மோட்சத்தை அருளுகிறான். அவ்விதம் மோட்சம் அடைந்தவர்கள், நித்ய சூரிகளாக, ஸ்ரீவைகுண்டத்தில், ஸ்ரீமந் நாராயணனுக்கு சேவை செய்து கொண்டிருப்பார்கள். இவர்களே 'சேஷன்' என்று அழைக்கப்படுவர். ஜீவனகள் அடைய வேண்டிய உன்னத நிலையான மோட்சத்தையே, சரணாகதியடைந்தால் அளிக்கும் பரமாத்மா, தன்னைச் சரணடைந்த ஜீவன்களின் அற்ப சுகங்களை நிறைவேற்றி வைக்கமாட்டாரா? 'வைப்பார்', என்பது திண்ணம்.

இவ்வாறு தன்னைச் சரணடைந்தவர்களை, ஸ்ரீமந் நாராயணன் எனப்படும் பரமாத்மாவான மகாவிஷ்ணு, எந்த நிலைக்கு உயர்த்தியுள்ளார் என்பதை இராமாயண, மகாபாரத இதிகாஸங்கள் வாயிலாக நாம் தெளிவாக அறியலாம். மேலும் ஆழ்வாரக்ளும், சரணாகதியின் பெருமையை தாங்

களே உணர்ந்து, உலகம் உய்யும் பொருட்டு, பக்திப் பெருக்குடன் பாசுரங்கள் பாடி, யாவர்க்கும் உணர்த்தியுள்ளார்கள். வள்ளுவரும் வைஷ்ணவ ஆச்சாரியார்களும், சரணுகதியின் மகிமையை மக்களின் மனதில் பசுமரத்தாணி போல் பதியும் வண்ணம் கூறியுள்ளார்கள்.

## இராமாயணத்தில் சரணுகதியின் பெருமை

தண்டகாரண்யத்தில் சரபங்க மகரிஷி சீரிய முறையில் தவம் செய்து, என்றும் ஸ்ரீமந் நாராயணனையே நினைத்துக் கொண்டு வாழ்ந்து வருகின்ருர். அவரது சீரிய தவ வாழ்க்கையின் கர்ம பலனை அனுபவிக்க, பிரம்ம லோகத்திற்கு அவரை அழைத்துச் செல்வதற்காக, தேவேந்திரன் தனது பரிவாரங்களோடு தங்க விமானத்தில் அங்கு வருகிருர். அதே சமயத்தில் சீதா லக்ஷ்மண சமேதரர்க ஸ்ரீராமனும், தண்டகாரண்யத்தை நோக்கி வந்து கொண்டிருக்கின்றனர். இதையறிந்த இந்திரன், பரமாத்மாவான ஸ்ரீமந்நாராயணனே தெய்வ காரியம் முடிக்கும் பொருட்டு ராமனாக அவதாரம் செய்திருக்கிருர் என்றும், அத் தெய்வகாரியம் முடியும் முன், தான் அவரைச் சந்திக்கலாகாது என்றும், இராமன் அவ்விடம் வந்து சேருவதற்குள், சரபங்கரை தன்னுடன் வரும் மாறும் இந்திரன் பணிக்கின்ருன்.

ராமரின் வரவையறிந்த சரபங்கர், இந்திரனிடம் தனக்கு பிரம்மலோகத்தில் விருப்பமில்லை என்றும், ராமனை சரணுகதியடைந்து, ஜீவாத்மா அடைய வேண்டிய உன்னத நிலையான மோடசத்தை அடைய, தான் விரும்புவதாக கூறி, இந்திரனை அனுப்பி விட்டார். சரபங்கரின் குடிலையடைந்த ராமரை, அதிக மகிழ்ச்சியுடன் வரவேற்று, அதிதி பூஜை செய்து சரணுகதியடைந்தார்.

மேலும் தன்னுடைய தவ, யாகப் பலத்தினால் ஏற்பட்ட கர்மபலன்கள் அனைத்தையும் ராமருக்கு அர்ப்பணித்து, அவரின் திருவடிகளைப் பற்றி நின்ருர். வேண்டியதை, வேண்டியவர்க்கு வேண்டியபடி அருளும் அக்கருணுமூர்த்தியான ஸ்ரீமந் நாராயணனின் அவதாரமான ராமன் சரபங்கருக்கு மோட்சத்தை அருளினார்.

தண்டகாரண்யத்தில் வாழ்ந்துவந்த பல ரிஷிகளும், முனிவர்களும், தபஸிகளும் யாவரும், சரபங்கரைப் பின்பற்றி, தங்களின் கர்மத்தின் பலனை இராமருக்கு அர்ப்பணம் செய்து, சரணுகதியடைந்து,. மோட்ச கதியடைந்தனர்.

வேறு சில ரிஷிகள், தங்களுடைய யாகம், தவம், யக்ஞம் போன்றவை, அரக்க பூதங்களின் இடையூறின்றி நடந்திட வழி செய்யுமாறு வேண்டி, ராமரை சரணுகதியடைந்தனர். ராமரும் அவர்களின் தவத்தைக் காத்திடவும் யாகம், யக்ஞம் தடைபடாமல் நடக்கவும் தான் உதவுவதாக உறுதி அளித்தார்.

இராமர், அரக்கர்களையழிக்க வேண்டுமென்ருல் அவர்களால் ராமருக்கு ஏதேனும் பங்கம் (துன்பம்) ஏற்பட வேண்டும். அதுவும் தன் பொருட்டு நிகழும் துன்பமாக இருந்தால் தான், அரக்கர்களை வதம் செய்வது என்பது நடக்கும் என்பதை உணர்ந்த சீதை, அதனைத் தவிர்க்க ராமலக்ஷ்மணர்களை, அவர்கள் எப்பொழுதும் ஆயுதம் தாங்கியிருப்பதை தடைசெய்ய நினைத்தாள். ஸீதையின் மனக் கருத்தையுணர்ந்த ராமர், சீதா தேவிக்கு, கீழ்க்கண்டவாறு திருவாய் மலர்ந்தார்.

"என்னைச் சரணடைந்தவர்களுக்கு கொடுத்த வாக்கைக் காப்பாற்ற, என் ஆத்மாவின் பாதியான உன்னையும், என் ஆத்மாவேயான லக்ஷ்மணனையும், என் உயிரையும் கூட விலையாகக் கொடுக்கத் தயங்கமாட்டேன்"

இதன்மூலம் தன்னைச் சரணுகதியடைந்தவர்க்கே தான் முதலில் அருள் செய்வதாகத் தெள்ளத்தெளிவாக கூறுகிருர் பரமனின் அவதாரமான ஸ்ரீராமர்.

இராமராக வந்திருப்பவர், 'நர நாராயணன்' என்றும் அவனே 'மகாவிஷ்ணு' என்றும், சீதையே 'மஹாலக்ஷ்மி' என்றும் அறிந்தவன் விபீஷணன். தன் சகோதரனான இராவணனிடம் அதனை எடுத்துக்கூறி, சீதையை ராமனிடம் சேர்த்து, அவனடி பணிந்தால் உயிர் தப்புவது நிச்சயம். இல்லையேல் அழிவது திண்ணம் என்று இதமாக எடுத்துக்கூறினான். இதனால் சினமுற்ற இராவணன், அகந்தை கண்ணை மறைக்க, தம்பி, விபீஷணனைப் பழித்துப் பேசியும், 'துரோகி' என்று ஏசியும் அவையிலிருந்து வெளியேற்றுகின்ருன்.

விபீஷணன், ஸ்ரீராமனை தஞ்சம்புக எண்ணி வான் வழியே இராமன் இருக்குமிடம் தேடி வருகின்ருன். வானர சேனைகள் ஸ்ரீராமரை சூழ்ந்திருப்பதைக் கண்டு தான் வந்த நோக்

கத்தை இராமனிடம் தெரிவிக்குமாறு சுக்கிரீவனிடம் அனுமதி வேண்டி நின்றான் விபிஷணன். இதனை அறிந்த சுக்கிரீவன் உள்பட, ஜாம்பவான், அங்கதன், நீலன், (அனுமனைத் தவிர) அங்கிருந்த அனைவரும் விபிஷணன், ராமரைச் சந்திப்பதை மறுத்தனர். பகைவனின் ஒற்றனாக இருக்கக்கூடும் என ஐயமுற்றனர். இதனை ராமரிடம் தெரிவித்து, அனுமதியளிக்க மறுக்குமாறு ஆலோசனையும் வழங்கினர். ஆனால், ராமரோ, தன்னைச் சரணகதியென வந்தவர்களை 'தாமதப்படுத்தியதே தவறு' என்று கூறினார். இராவணனே, விபிஷணன் வடிவில் வந்து என்னை அடிப்பணிந்தாலும் ஏற்றுக்கொள்வேன். அதனால் தன்னுயிருக்கு ஆபத்து விளையும் என்றாலும் பாதகமில்லை என்று விளக்கி விபீஷணனை உடனே அழைத்து வர பணித்தார். அதுமட்டுமின்றி தானே நேரில் சென்று விபீஷணனை எதிர்கொண்டழைத்தார். விபீஷணனும், ராமரை சரணகதியடைந்து, அடைக்கலம் வேண்டி நின்றார். அக்கருணமூர்த்தியான ராமர், விபீஷணனுக்கு அடைக்கலம் அளித்து இலங்காதிபதியாக . முடிசூட்டினார். நித்ய சூரிகளுள் ஒருவராக்கினார். நாட்டையாளும் இகலோக சுகத்தை மட்டுமின்றி மோட்சத்தையும் பரமாத்மா, விபீஷணனுக்கு ஒருங்கே அருளினார்.

அடிப்பணிந்தவர்ளுக்கு மட்டுமல்லாது, தன் மனைவியை கவர்ந்து, தனக்கு இன்னல் இழைத்த இராவணன் தன்னுடன் போரிடும்போழுது, அஸ்திர சஸ்திரங்களை இழந்து நிராயுதபாணியாக போர்க்களத்தில் நிற்கும் பொழுதும், 'இன்று போய் நாளைவா' என்று இராவணன் தன் தவற்றை அறிய, இறுதி அவகாசம் அளிக்கின்றார். இதைப்பற்றி, அன்றைய இரவு, வானரர்களோடு நடந்த விவாதத்தில் ராமர், இராவணன் மனம் மாறி, தவறை உணர்ந்து, உடனே சீதாப்பிராட்டியை தன்னிடம் ஒப்படைத்து, தன்னைச்.சரண் அடைந்தாலும் அவனை ஆட்கொண்டு மறுபடியும் அவனை இலங்காதிபதியாக்குவேன்' என்று கூறினார். விபீஷணனுக்கு, தான் அளித்த வாக்குறுதியை நிறைவேற்ற தன் நாடான அயோத்தியை அளிப்பேன் என்றும் இயம்பினார். இதன்மூலம் சத்ய தர்மத்தை மீறியவர்களேயானாலும், மனம் மாறி தவறையுணர்ந்து தன்னைச் சரணடைபவர்களையும், பரமாத்மாவானவன், அரவணைத்துக் காப்பான் என்பது, அன்றே உறுதியாக்கப்பட்டது.

## மகாபாரதத்தில் 'சரண் புகுதல்'

சூதாட்டத்தில் தருமன் துரியோதனிடம் பொன், பொருள், நாடு யாவற்றையும் இழக்கிறான். பிறகு தன் தம்பிகளையும், தன்னையும் பணயம் வைத்து இழக்கிறான். இறுதியில் தன் மனைவி திரௌபதியையும் இழக்கிறான்.

யாவரும் துரியோதனின் அடிமைகளாகின்றனர். இச்சமயத்தை எதிர்நோக்கியிருந்த துரியோதனன், திரௌபதியை சபைக்கு அழைத்து வந்து, மானபங்கம் செய்யுமாறு தம் தம்பி துச்சாதனிடம் கட்டளையிடுகின்றான்.

திரௌபதி அவ்வாறே சபைக்கு இழுத்து வரப்பட்ட பொழுது நியாயம் கேட்டு, தர்மவான் களான பீஷ்மர், துரோணரிடமும், மகாத்மாவான விதுரரிடம் முறையிடுகிறாள். அவர்கள் கூறிய அறநெறியை, துரியோதனன் தன் கர்வத்தால் இழித்து, ஒதுக்கியதால் அவர்கள் அழுது சாய்ந்தார்கள். துச்சாதனன், தன் தமையன் ஆணைப்படி திரௌபதியை துகில் உரிக்க, அவள் துகில் பற்றுகிறான். அப்பொழுது திரௌபதி தன் பதிகளான அர்ச்சுனனிடமும், பீமனிடமும், தன்னைக் காக்குமாறு கூறி ஒடி முறையிடுகிறாள். ஆனால் அவர்கள் செய்வதறியாது அடிமைகளாய்· மௌனம் காத்தனர்.

தன்னிலையுணர்ந்த திரௌபதி, இந்நிலையில் தன்னைக் காக்க பரம்பொருளால் மட்டுமே இயலும் என்பதையுணர்ந்தாள். மார்பைப் போர்த்தியிருந்த தன் கைகளை தலைமேல் தூக்கி, கரங்கள் கூப்பி, கண்ணனைச் சரணடைந்து, அபயம் தர வேண்டுகின்றாள். அடியும் முடியும் காணமுடியாத பரம்பொருளின் அவதாரமான கண்ணன், முனைவும் முடிவும் இல்லாத துகில் வளர்த்து, திரௌபதியின் மானம் காத்தான்.

"வையகம் காத்திடுவாய்-கண்ண
மணிவண்ண என்றன் மனச்சுடரே
ஐயநின்பதமலரே - சரண்
ஹரி, ஹரி, ஹரி, ஹரி, ஹரி
என்றாள்"

என்று திரௌபதியின் சரணகதியினை நம் கண் முன் கொணர்ந்து நிறுத்துகிறார் பாகவி பாரதி. சரண்புகுந்தவர்கள் துயர்தீர்க்க, அவர்கள் நினைத்த மாத்திரத்தில் 'பரமாத்மாவானவன்' தோன்றுவான் என்பது இங்கு உறுதி செய்யப்பட்டது.

குருக்ஷேத்திரப்போர் தொடங்குமுன்னர், அர்ச்சுனன், தன் சாரதியான கண்ணனிடம், தன் தேரை பாண்டவ கௌரவ சேனை அணிகளுக்கிடையே நிறுத்தப்பணித்தான். வில் வலிமை, மேலும் தவ வலிமையால் பல அஸ்திரங்களைப் பெற்றிருந்தும், இருபக்கமுள்ள உறவினர்கள், குருமார்கள், நண்பர்களைக் கண்டு, அவர்களை போரில் கொல்ல நேரிடுமே என்று பாசத்தின் காரணமாக துக்கித்து, அர்ச்சுனன் நிலை தடுமாறுகின்றான். போரை வெறுத்து, வில்லையெறிந்து, தேர்த்தட்டில் சாய்கிறான். அந்நிலையில் நண்பனாகவும், உறவினனாகவும், சாரதியாகவுமே பழகிவந்த கண்ணனை பரமாத்வாக அறிகிறான். பிறகு,

"கார்ப்பண்ய தோஷோ பஹத-
ஸ்வபாவ
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்
மூட சேதா
யச்சரேய ஸ்யாந் நிஸ் சிதம்
ப்ருஹிதந்மே
ஸிஷ்யஸ் தேஹம் ஸாதிமாம்
த்வாம் ப்ரபந்தம்"

'இரக்கம் என்ற கேட்டினால் நிலையிழந்து, தர்மம் அறியா நிலையில் உள்ள எனக்கு, எது தர்மம் என்று உறுதியாக உணர்த்துக. நான் உமது சிஷ்யன், உம்மைச் சரணடைந்தேன்' எனக்கு நல்வழி காட்டுவாயாக என்று பரமனடி பணிந்தான். அப்பொழுது பரமாத்வான கண்ணன் தனது 'கீதா உபதேசம்' மூலம் விஜயன் மனக்கவலையை அறுத்து தன் விஸ்வரூப தரிசனம் மூலம் தானே எல்லாம் என்பதை உணர்த்தி அர்ச்சுனனை ஆட்கொள்ளுகின்றார். எத்துணை வல்லார்களும், பரமன் தன்னை ஆட்கொள்ள வேண்டுமெனில் அவனடி பணிதல்தான் சிறந்தது. அவ்வாறு தன்னைச் சரண் புகுந்தவர்களுக்காக எந்தவொரு ஊழியத்தையும் செய்வான் கண்ணன் என்பது திண்ணமாக விளங்குகின்றது.

## ஆழ்வார்கள் பாசுரத்தில் சரணாகதி

பன்னிரு ஆழ்வார்களும், பரமனிடம் பக்திக் கொள்வது பற்றியும், அவனைச் சரணடைவதால் அடையும் பேறு பற்றியும், பல பாசுரங்கள் வாயிலாக நமக்கு உணர்த்தியுள்ளார்கள். மேலும் பரமனடி பணிதல் மட்டுமின்றி, அவன் அடியவர்களையும் பணிதல், பரமனை அடைய சிறந்த நெறி! என்றுவலியுறுத்துகின்றார்கள்.

"நீள்கடல் சூழ் இலங்கைக்கோன்
தோள்கள் தலைதுணி செய்தான்
தாள்கள் தலையில் வணங்கி
நாள்கள் தலைக் கழிமினே"
-திருவாய்மொழி

'நீண்ட கடல் சூழ்ந்த இலங்கைவேந்தனின் தலைகளும் தோள்களும் அழிபட வீழ்த்தியவனான இராமபிரானின் தாள்களில் சரணாகதிப்புகுந்து, என் பிறவியைக் கழிப்பேன்' என்ற நம்மாழ்வாரின் பாசுர வரிகள் குறிப்பிடத்தக்கது.

"நாடிலும் நின்னடியே நாடுவன்,
நாடோறும்
பாடிலும் நின் புகழேப்பாடுவன்-
சூடிலும்
பொன்னாழி யேந்தினான்
பொன்னடியே சூடுவேற்கு
என்னாகி லென்னே எனக்கு?"
-முதல் திருவந்தாதி

பரமனடியே நாடி, தினமும் அவன் புகழை மட்டுமே பாடி,

### சித்திரை - வைகாசியில்
## ஆழ்வார்-ஆசார்யர்கள் அவதாரநன்னாட்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | வடுகநம்பி | அச்வனி | 26-4-98 |
| 2. | உய்யக்கொண்டார் | கிருத்திகை | 28-4-98 |
| 3. | எங்களாழ்வான் | ரோகிணி | 29-4-98 |
| 4. * | ராமாநுசர் | திருவாதிரை | 1-5-98 |
| 5. | ஆட்கொண்டவில்லிசீயர் | திருவாதிரை | 1-5-98 |
| 6. * | முதலியாண்டான் | புனர்வசு | 2-5-98 |
| 7. | கிடாம்பியாச்சான் | அஸ்தம் | 8-5-98 |
| 8. * | மதுரகவியாழ்வார் | சித்திரை | 9-5-98 |
| 9. * | திருமலைஅனந்தாழ்வான் | சித்திரை | 9-5-98 |
| 10. | நடாதூர் அம்மாள் | சித்திரை | 9-5-98 |
| 11. | திருக்கோட்டியூர்நம்பிகள் | ரோகிணி | 26-5-98 |
| 12. * | நம்மாழ்வார் | விசாகம் | 8-6-98 |
| 13. | பிள்ளைதிருமலைநம்பி | விசாகம் | 8-6-98 |
| 14. | திருவாய்மொழிப்பிள்ளை | விசாகம் | 8-6-98 |
| 15. * | பட்டர் | அனுஷம் | 9-6-98 |
| 16. | சீராமப்பிள்ளை | அனுஷம் | 9-6-98 |
| 17. | திருவரங்கப்பெருமாள்அரையர் | கேட்டை | 10-6-98 |

* திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் கொண்டாடும் நட்சத்திரங்கள்

சக்கராயுதத்தை ஏந்திய இறைவனின் பாத கமலங்களையே தன் தலைமீது சூடுவேன், மற்றபடி என் உடலுக்கு என்னாகிலும் சரி என்கிறுர். பொய்கையாழ்வார், அவரது முதல்திருவந்தாதிப் பாசுரங்கள், சிறப்பாக சரணுகதியின் மகத்துவத்தை எடுத்துக்கூறுகின்றன.

தன்னை சரண் புகுந்தவர்களை பரமன் காப்பான் என்பது மனித உயிர்களுக்கு மட்டுமன்று, எல்லா உயிர்களுக்கும் அஃதே! கஜேந்திரன் என்ற யானை தினமும் பரமனுக்கு தாமரை மலர் கொய்து, கொணர்ந்து பூஜித்தது. ஒரு நாள் அவ்வாறு மலர்கொய்யச் செல்லும்போது, ஆற்றில் அதன் காலை ஒரு முதலை கௌவியது. நீரில் பலம் வாய்ந்த முதலையிடம் போராடி, தன்னைக் காத்துக்கொள்ள முடியாத நிலையில் அந்த யானை, 'ஆதி மூலமே' என்று பரமனைப் பணிந்து அலறியது. எவ்வுயிராயினும், தன்னைச் சரணடைந்தால் அதனை தன்னோடு சேர்த்துக்கொள்ளும் பரமனும், கருட வாகனத்தில் எழுந்தருளி, தன் சக்கராயுதத்தால் முதலையைக் கொன்று, கஜேந்திரனுக்கு மோட்சம் அருளினார்.

## திருக்குறளில் சரணுகதி தத்துவம்

"பிறவிப்பெருங்கடல் நீந்துவர்-
நீந்தார்
இறைவனடி சேரா தார்"

பிறப்பு, இறப்பு என்ற பெருங் கடலை, ஒரு ஜீவனானது, கடக்க வேண்டுமென்ருல் அது பரம்பொருளை சரணுகதி அடைவதால் மட்டுமே பெறமுடியும் என்று தெள்ளத் தெளிவாக கூறியுள்ளார் வள்ளுவப் பெருமான்.

"வேண்டுதல் வேண்டாமை இலானடி
சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல"

"மலர்மிசை ஏகினான் மாணடிச்
சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்"

விருப்பு, வெறுப்பு என்ற பாகுபாடில்லாத பரம்பொருளைச் சரணடைந்தவர்களுக்கு துன்பம் என்பது என்றுமில்லை நிலவுலகில் நீண்ட வாழ்வும் அவர்களுக்கு உண்டு என்பது வள்ளுவர் கண்ட கடவுள் நெறி!

## வைஷ்ணவ ஆச்சார்யர்களின் பாசுரங்களில் சரணுகதி

"நின்னருளாங் கதியன்றி
மற்ருென்றில் லேன்
நெடுங்காலம் பிழைசெய்த
நிலைக் கழிந்தேன்
உன்னருளுக்கினிதான நிலை
யுகந்தேன்
உன் சரணே சரணென்னும்
துணிவு பூண்டேன்
மன்னிருளாய் நின்ற நிலை
யெனக்குத் தீர்த்து
வானவர் தம் வாழ்ச்சிதர
வரித்தேனுன்னை
இன்னருளால் இனியெனக் கோர்
பரமேற்ருமல்
என் திருமால் அடைக்கலங்கொள்
எனை நீயே"

என்ற தேசிகப் பிரபந்தமும், சரணுகதியின் மகிமையை வலியுறுத்துகின்றது.

எல்லாவற்றுக்கும் மேலாக, வேதங்களின் சாரமான பகவத் கீதையில், பரமாத்மாவான கண்ணன், ஜீவனானது, தன்னை அடைவதற்கு பல மார்க்கங்களை கூறுகின்ருன். அதில், பதினெட்டாவது அத்யாயமான, 'மோட்ச ஸன்யாஸ யோகம்', கீதையின் சிகரமாக விளங்குகின்றது. இதில், 65, 66-வது ஸ்லோகங்களில், என்னிடம் மனதை வைத்து, என் பக்தனாக்கி, எனக்கே பூஜை செய்து, என்னை வணங்குபவன், என்னை அடைவான். நான் ஆணையிட்டுச் சொல்கிறேன். "எல்லா தர்மங்களையும் விட்டு, என்னொருவனையே சரணமாக அடைபவனை, நான் ஸகல பாவங்களினின்றும் விடுவிக்கின்றேன்" என்று கூறுகின்ருர். "என்னை சரணுகதியடைந்தவனிடமே நான் முதலில் செல்கிறேன். ஏனென்ருல் அவன் என்னைத் தவிர வேறு எவரையும் கதியாக கொள்ளவில்லை'' என்றருளியுள்ளார்.

இதிலிருந்து ஜீவனானது, மோட்சத்தை அடைய, பரம்பொருளை சரணுகதியடைதலே தலைசிறந்த வழி என்று வேதங்களும், இதிகாஸங்களும், இவற்றின் சாரமான கீதையும் தெள்ளத் தெளிவாக விளக்குகிறது. மேலும் இது நான்கு யுகங்களுக்கும் பொருத்தமான ஸத்தியக்கூற்ருக உள்ளது.

ஆகையால் பரம்பொருளான நாராயணனை இன்றும், என்றும் மனதில்கொண்டு, அவனைத் தவிர வேறுகதியில்லை என்று நினைத்து, யாவற்றையும் அவனுக்கே அர்ப்பணித்து, அவனை மனதார சரணடைவோம். அவன், ஜீவனானது அடைய வேண்டிய உன்னதமான நிலையை, அதாவது மோட்சத்தை நமக்களித்து நம்மைக் காப்பான் என்பது திண்ணம்.





# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | ஒருவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 620/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |
| | | **வாராந்திர சேவைகள்** | | | |
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கஸ்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |
| | | **வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்** | | | |
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினேழாம் அத்தியாயம்

## சிரத்தாத்ரய விபாக யோகம்

உமைப்ரியன்

அபலாகாங்க்ஷிபிர்யக்ஞோ
விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்யமேவேதி மன:
ஸமாதாய ஸ ஸாத்விக: ॥ (11)

"சாத்திரங்களில் கூறியபடி நியமிக்கப்பட்டுள்ள வழிபாடுகளை எந்தவிதமான பயன்கருதாது பின்பற்றப்படுவதே மேலானது என்று கருதி, அந்த வகையில் எந்த எந்த வழிபாடுகள் செய்யப்படுகின்றனவோ அவையாவும் சாத்விகமானவையாகும்."

[தன்னலமற்று, ஈடுபாடுடன், எவ்விதமான நன்றியையும் எதிர்பார்க்காது எவ்வாறு ஒரு தாய் தன் குழந்தையை வளர்க்கிறாளோ அந்த நிலையில் எந்த விதமான பயன்கருதாது, சாத்திரங்களில் கூறியபடி, பக்தி ஒன்றினையே தன் குறிக்கோளாக நினைத்து, அறவழியில் ஒருவன் செய்யும் கடவுள் வழிபாடே சாத்வீக வழிபாடு என்றழைக்கப்படுகிறது.]

அபிஸந்தாய து பலம் தம்பார்த்த-
மபி சைவ யத் ।
இஜ்யதே பரதச்ரேஷ்ட தம்
யக்ஞம் வித்தி ராஜஸம் ॥ (12)

"பரதகுலத்து உத்தமனே! பயன் கருதி ஆடம்பரத்துடன் செய்யப்படும் வழிபாடு ராஜஸ வழிபாடாகும் என்பதை அறிவாயாக."

[புகழ், பதவி, செல்வம் ஆகியவற்றை அடைந்திட, பெரும் பொருள் செலவில் பொது இடங்களிலும் தங்கள் வீடுகளிலும் மேற்கொள்வதும், ஆடம்பர உற்சாகத்துடன் தங்கள் பெருமை, வலிமைகளைப் பறைசாற்றிக்கொள்ளும் வகையில் பலரையும் கவரும் வகையில்



சமய வழிபாடுகளை நிகழ்த்துவதும் ராஜஸ வழிபாட்டில் அடங்குவனவாகும். இது ஒரு வகையில் இறைவனை வியாபார நோக்கில் வழிபடும் செயலாகும்.]

**விதிஹீனமஸ்ருஷ்டான்னம்**
**மந்த்ரஹீன மதக்ஷிணம் ।**
**ச்ரத்தாவிரஹிதம் யக்ஞம்**
**தாமஸம் பரிசக்ஷதே ॥ (13)**

"வேதவிதிகளுக்கு புறம்பானதும், அன்னதானமற்று விளங்குவதும் மந்திரங்கள் கூறப்படாததும், தக்ஷிணையின்றியும், ஈடுபாடு இல்லாததுமாகிய வழிபாடு தாமச வழிபாடாகும்."

[வேத விதிகள் என்பது குற்றமற்ற நெறிமுறைகள் என்று பொருளாகும். எந்தவிதமான குற்றம் குறைகள் இல்லாத வழிபாடே மனிதனை உயர்த்தும். தானங்களிடையே உயர்வானது, உடனடியாக பயன் தருவது அன்னதானமேயாகும். மனிதனது மதியை முட்டாளாக்குவது பசி எனும் அவனது முதல் எதிரியேயாகும். ஆகவே பசி எனும் பெரும் பிணியை அன்னதானம் எனும் ஒருசெயல் மூலமே குணப்படுத்த முடியும். 'உப்பிட்டவரை உயிருள்ளவரை நினை' என்றதன் மூலம் அன்னதானமே மக்களிடையே நன்றி எனும் உணர்வின் பின்னால் ஒரு பிணைப்பினை யாரும் அறியாமலே உருவாக்கிடும். மந்திரங்கள் மனதில் நல்ல எண்ண உணர்வுகளை ஏற்படுத்திடும் வகையில் மனதில் ஒரு ஆன்மீகச் சூழ்நிலையை ஏற்படுத்திடும் சிறப்பு உடையன. வீடு அல்லது சமுதாயம் பயன்பெற பல சமயச் சடங்குகள் நடைபெறுகின்றன. இவற்றை புரோகிதர்கள் என்போர் நடத்துவர். இதனை இவர்கள் தங்கள் குலத்தொழிலாக நடத்தினாலும் பயன்கருதாது, பொருள் நோக்காது மேற்கொள்ளவேண்டும் என்பது சாத்திரவிதி. இவர்கள்தம் சேவை, அவர்களது எவ்விதமான தனிப்பட்ட துன்பங்கள் இடையூருக அமைந்து தடைபடக் கூடாது என்ற எண்ணத்தில், மக்களே மனமுவந்து தட்சிணை எனும் பெயரில் தொகை அளிப்பர். இந்தத் தொழில் இலக்கணம் உண்மையான புரோகிதர்களுக்கே பொருந்தும். அவ்வாறு சேவை செய்யும் புரோகிதர்களுக்குத் தட்சிணை தரும் போதுதான் செய்யும் சடங்குகளுக்குப் பொருள் இருக்கும்; பயன் விளங்கும். எந்தவிதமான ஈடுபாடு இன்றி, கடனுக்காக செய்யும் வழிபாடு பயனற்றது. ஆகவே மேற்கூறிய குறைபாடுகள் கொண்ட வழிபாடு தாமச வழிபாடாகும்.]

**தேவத்விஜகுருப்ராக்ஞபூஜனம்**
**சௌசமார்ஜவம் ।**
**ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச சாரீரம்**
**தப உச்யதே ॥ (14)**

"தேவர்கள், அந்தணர்கள், குருமார்கள், ஞானிகள் ஆகியோரைப் போற்றுவதும், தூய்மை, நேர்மை, பிரம்மசர்யம், கொல்லாமை ஆகியவற்றைத் தன்னிடம் கொண்டு விளங்குவதும் உடலால் செய்யப்படும் தவம் என்று அழைக்கப்படுகிறது."

[தபஸ் என்ற வடமொழி சொல்லே தவம் என்று தமிழில் மாறியுள்ளது. தப: என்ருல் உருக்குதல் என்று பொருளாம். மூலப்பொருட்களை உருக்குதல் மூலம் அவை தூய்மையாகின்றன. அதுபோன்றே உடல், மொழி, மனம் ஆகியவற்றை சிறந்த தவம் மூலம் தூய்மையாக்கலாம். இதுவே உடல் தவமாகும். மேலும் இறைவனது பிரதி பிம்பங்களாக - தூதுவர்களாக - அங்கங்களாக தேவதைகள்- தேவர்கள் விளங்குகின்றனர். இவர்களையே நாம் வருணன், அக்னி, வாயு என்று அழைக்கிறோம். அந்தணர்கள் என்போர் அறவழியில் வாழ்வோர். எதற்கு அஞ்ச வேண்டுமோ அதற்கு அஞ்சி, எங்கு போராட வேண்டுமோ அங்கு எதிர்நின்று, தர்மத்தின் வழியில் வேத அறிவோடு உலக நன்மைக்காக வாழ்வோரே பிராம்மணர்கள். தக்க கல்வி, உலக அனுபவத்தைக் கற்றுத்தருவோரே ஆசிரியர்கள் எனும் குருமார்கள். இறை உண்மை உணர்ந்து, இறைத் தத்துவத்தை - இயற்கை உண்மையை விளக்குபவரே ஞானிகள் அல்லது மாமுனிவர்கள். இத்தகையோரை மேற்கூறிய மனம், மொழி, மெய் (உடல்) ஆகியவற்ருல் வழிபடுவதே 'தேக தவம்' என்பர். அதுமட்டுமின்றி, உடலை சுத்தமாக்கிக் கொண்டு, இந்திரியங்களை நல்ல உணர்வில் செலுத்தி செயலாற்றிடும் இயல்பான நேர்மை எனும் குணம் கொண்டு, சிற்றின்பத்தில் மூழ்கடித்துப் பின்பு வாழ்க்கை எனும் சிக்கலை, துன்பத்தை உண்டாக்கிடும் போக வாழ்க்கை மறந்த யோக நிலையான பிரம்மசர்ய நிலை கொண்டு, தன் உடலால் பிற உடல்களுக்குச் சிறிதும் தீங்கிழைக்காத, துன்புறுத்தாத கொல்லாமை இயல்பு கொண்டு வாழ்ந்திடும் இவ் உடல் கொண்ட செயலே 'உடல் தவ'மாக அழைக்கப் பெறுகின்றது.]

*அனுத்வேககரம் வாக்யம்*
*ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।*
*ஸ்வாத்யாயாப்யஸனம் சைவ*
*வாங்மயம் தவ உச்யதே ॥ (15)*

"பிறர்க்கு துன்பம் தராத வாய்மை, இனிமை, நலன் ஆகியவற்றைக் கொண்ட வார்த்தைகள் மற்றும் வேத மந்திரங்களைக் கூறுதல் 'வாக்குத் தவம்' என்று அழைக்கப்பெறுகிறது."

[ஒருவரை கைகொண்டு அடித்து துன்புறுத்த வேண்டுமென்றால் மற்றொருவர் அவர் இருக்கும் இடம் வரை செல்லுதல் அவசியமாகும். அதற்கு சில நிமிட நேரங்கள்கூட செலவாகும். ஆனால் இருந்த இடத்திலேயே ஒருசில வினாடிகளிலேயே ஒருவர் மற்றொருவரை சொல் கொண்டு தாக்கித் துன்புறுத்தலாம். ஆகவே சொற்களுக்கு அவ்வளவு ஆற்றல் உண்டு. எனவே துன்பம் தராத சொற்களையே பயன்படுத்தல் வேண்டும். மேலும் பிறர்க்கு கோபமோ, துன்பமோ, சத்தியத்திற்கு எதிராகவோ அமையாத சொற்களையே கூறுதல் வேண்டும். கேட்பவர்களின் மனம் அமைதியுறும் வகையில் பேசுதலும் அவசியமாகும். பிறர் சொல்லி மற்றொருவர் அவற்றைக் கேட்கும் போது கேட்பவர்க்கு அவற்றால் நல்ல பயன் ஏற்படும் வகையில் அமைதல் வேண்டும். அடுத்தது வேதம் ஓதுதலின் சிறப்புப் பேசப்படுகின்றது. இறைவனின் ஆற்றல், இயற்கையின் மேன்மை, சமயத்தின் மாண்பு ஆகியவற்றைக் கூறுவன வேதமும் வேதாந்தமுமாகும். அத்தகு வேத மந்திரங்களை வாய்விட்டு உச்சரித்துக் கூறுவோமேயானால், மனம், சொல் ஆகியன தூய்மையாகின்றன.]

*மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம்*
*மௌனமாத்மவிநிக்ரஹ: ।*
*பாவஸம்சுத்திரிதயேதத்தபோ*
*மானஸமுச்யதே ॥ (16)*

"மனஅமைதி, அன்புடைமை, மௌனம், தன்னடக்கம், தூய்மையான நோக்கம் ஆகியவற்றைப் பெற்றிருத்தலே மனத்தவம் என்று கூறப்படுகிறது."

[மன அமைதி என்பது மனிதனிடம் இருக்கவேண்டிய அவசியமான இறைவனது திருவருளாகும். மனக்குழப்பம் மற்றும் மனச்சோர்வு இன்றி மகிழ்ச்சியுடன் இருத்தலே மன அமைதியாகும். மன அமைதிக்கு எதிரி கோபம், பொறாமை, காமம் போன்றனவாகும். இவற்றைத் தவிர்த்திடும் போது மனம் அமைதிபெறுகின்றது. அன்பு இல்லாத மனம் பாலைவனமாகும். இங்கு முட்செடிகள் மட்டுமே பயிராகும். அன்பே கடவுளாகும். அன்பு உள்ளமே மனிதனை மகானாக்கும். மௌனம் போன்ற ஒரு சிறந்த யோகம் ஏதும் இல்லை. இங்கு மௌனம் என்பது வாய்மூடி பேசாது இருத்தல் அல்ல. மன மௌனமே சொல், செயல், சிந்தனையை தூயதாக வைத்திடும் பெருமை உடையது. அடுத்தது தன்னடக்கம். மன அடக்கமே சிறந்த அறிவினைத்தந்திடும். அறிவு சீர்மையாக இருக்கும் போது சொல், செயல் ஆக்கப்பூர்வமான பயன்களைத் தந்திடும். எண்ணங்கள் தூய்மையாக விளங்கிடும்போது, சமுதாயம் ஆரோக்யமாகத் திகழ்ந்திடும். இவையே மானச தவம் என்றழைக்கப்படுகிறது.]

*ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத்*
*த்ரிவிதம் நரை: ।*
*அபலா காங்க்ஷிபிர்யுக்தை:*
*ஸாத்விகம் பரிசக்ஷதே ॥ (17)*

"பயன் எதிர்பார்க்காது யோகத்தில் உறுதியாக இருந்து மக்களால் பெருமுயற்சியுடன் செய்யப்படும் மேற்கூறிய (முன் மூன்று செய்யுட்களில் கூறிய) தவங்கள் 'சாத்துவிக தவம்' என்று அழைக்கப்பெறும்."

['கடமையைச் செய், பயன் எதிர்பாராதே' என்பதே கீதையின் அடிப்படைத் தத்துவம். ஆகவே பயன் எதிர்பார்த்து செய்யும் எந்தவிதமான தவமும் மாசு உடையதாகி விடுகின்றது. அடுத்தது தவம் என்பது ஒரு யோகமாக நினைக்கப்படுவதால் அத்தவத்தினை மேற்கொள்ளும்போது இடையில் ஏமாற்றமோ, குறுக்கீடோ, தோல்வியோ ஏற்பட்டால் அவற்றைக் கண்டு துவளாமல், தவத்தைக் கைவிடாமல் இருப்பதே சிறந்த உறுதியாகும். இதற்கு நம்பிக்கை, பெருமுயற்சி மிகவும் அவசியமாகும். இவ் இயல்புகள் கொண்டு செய்யப்படும் தவமே 'சாத்துவிக தவ' மாகும்.]

(தொடரும்)

## நவ நாகங்கள்

1. அனந்தன் 2. ஆதிசேஷன் 3. கார்கோடகன் 4. சங்கபாலன் 5. தக்ஷன் 6. வாசுகி 7. மகாபதுமன் 8. குளிகன் 9. பதுமன் இவைகள் ஒன்பது பேரும் நவநாகங்கள்.

# பஞ்சமுக ஆஞ்சனேயர்

திரு. ஜீ. வரதராஜுலு - சென்னை.

சிறிய திருவடி, சாதாரண திருவடிகள் அல்ல. தாமரை மலர்களையொத்த திருவடிகள், அழகு சொட்டுகின்ற திருவடி.

'கமலம் அன்ன தாள் கண்டார்!
தாளே கண்டார்

அழகு மட்டுமல்ல அத்திருவடிகளில் வீரமும், வெற்றியும் முழுமையாக உள்ளன.

இலங்கையில் இராவணனின் திமிரை அடக்கியவன். ஐம் பூதங்களாகிய பஞ்சபூதங்களையும், தன்னுள்ளே அடக்கி வயப்படுத்திய பெருமான் இவர். இவர் வாயுவின் புதல்வன் என்பதால் காற்றையும் ராமநாமத்தையும் நினைத்து வானில் பறந்து சென்று இலங்கை சென்று மீண்டதால், ஆகாயத்தையும், சமுத்திரத்தையும் தாண்டியதால் நீரையும், சீதாதேவியின் அருளைப் பெற்றதால் பூமியையும், தன் வாலினால் இலங்கையையே அழித்து நெருப்பாகியதாலும் இவரை ஆகாயம், காற்று, நீர், பூமி, நெருப்பு ஆகிய பஞ்ச பூதங்களையும் தன்னுள்ளே வசப்படுத்திய பெருமான் இவர்.

அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத்தாவி
அஞ்சிலே. ஒன்று ஆறு ஆக
ஆரியர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக்கண்டு அயலாரூரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்
அவன் நம்மை அளித்துக்காப்பான்.



இவரைத் தொழுவதால் என்னென்ன கிடைக்கும். ஆத்ம பலம், புத்தி பலம், சம்பத் பலம், தேக பலம், பிராண பலம் இவைகள் எல்லாம் கிடைக்கும்.

அசோக வனத்தில் தன் உயிரை மாய்த்துக்கொள்ள முற்பட்ட சீதையின் உயிரை இராம நாமத்தை சொல்லித் தடுத்து நிறுத்தி நம்பிக்கை ஊட்டியவன் அனுமான். "உயிர் காத்த உனக்கு என்ன கைம்மாறு செய்வேன்"

"அம்மையே அப்பன் ஆய் அத்தனே
அருளின் வாழ்வே
இம்மையே மறுமை தானும்நல்கினை
இசையோடு என்கிறாள்"

இங்கு அனுமானை அப்பா, அம்மையே' என்று அன்பாய் அழைத்ததோடு இம்மை, மறுமை வாழ்வினை நல்கியவன் நீயே என்று வாழ்த்தியவர் சீதாபிராட்டியாவார். சீதையின் பிரிவுத்துயரால் துவண்டு போயிருந்த இராமனின் மனப் புண்ணிற்கு மருந்திட்டு உயிர் காத்தவன் அனுமான். பரதனின் உயிரையும் அவனுடன் சேர்ந்து மடிந்திருக்கக் கூடிய அயோத்தி மக்களின் உயிர்களையும் காப்பாற்றிய பெருந்தகையாளன் அனுமான்.

போர்க் களத்தில் நின்றுபோராடிய காலத்தில் இருமுறை இலக்குவனின் உயிரைக் காத்ததோடு அல்லாமல், வானர வீரர்கள் பலரையும் காத்து இராமபிரானின் வெற்றிக்கு வழி வகுத்தவன் அனுமான் எல்லா உயிர்களையும் காத்த தொண்டினால், இராமனால் "எங்களை ஈன்ற தாய்" என்ற பாராட்டுப் பெற்றவன்.

திருமாலின் அவதாரமான இராமனும், திருமகளின் அவதாரமான சீதையும் அனுமானை வாழ்த்தியதாலன்றோ இன்னும் அனுமான் நம் முன்னே வணங்கும் தெய்வமாக காட்சியளிக்கிறார்.

அரியனை அனுமான் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவரி பற்ற
விரிகடல் உலகம் ஏத்தும்
வெண்ணெய்
தன் சடையன் வண்மை
மரபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே
புனைந்தான் மௌளி
(கம்பர்)

"அரியனையில் இராமனது ஆட்சி பீடமே அரியனை அதில் அமர அனுமான் உதவியதால் அப்பீடத்தை அனுமானே தாங்கி நிற்பதாக கூறுகின்றனர். திருமாலின் அவதாரமான இராமன் ஆஞ்சனேயனைப் பார்த்து என்னைத் தழுவிக் கொள்" என்று தன்னைச் சிறியவனாக்கி அனுமானைப் பெரியவனாக்கி உறைக்கிறார் என்றால் இதைவிட பெருமையும், புகழும் வேறு யாருக்கு கிடைக்கும். அந்த புகழுரை அனுமானுக்கு மலர் கிரீடம் சூட்டியது போலுள்ளது.

அப்படிப்பட்ட ஆஞ்சநேயர் பஞ்சமுக ஆஞ்சநேயரான வரலாறு ஒன்று உண்டு.

அதாவது மயில் ராவணன், ஐராவதன் என்ற மாயாவி அரக்கர்கள் இருவர் இருந்தனர். இராமாயணப் போரில் இந்திரஜித் மாண்ட செய்தியைக் கேட்ட ராவணன் துடி துடித்து என்ன செய்வதென்றே தெரியாமல் விழித்தான். இராவணன் இராமர், லக்ஷ்மணர்களைக் கொல்ல மாயாவிகளான ஐராவதன், மயில் ராவணனின் உதவியை நாடினான். பாதாளலோகத்திலுள்ள மயில் ராவணன், ஐராவதன் இராவணனிடம் வந்தான். அவனைப் பார்த்த இராவணன் தன் ஆட்சி எங்கு போய் விடுமோ... என்று கண்ணீர்விட்டு கதறினான். ராமர், லக்ஷ்மணர்களைப் பற்றி நீங்கள் கவலைப் படவேண்டாம். என் மாய சக்திக்கு முன் அவர்கள் எம்மாத்திரம் அவர்களை இன்று இரவே தூக்கிச் சென்று அழித்துவிடுகிறேன் என்று சூளுரை உரைத்தான் மயில் ராவணன்.

அவர்கள் சதித்திட்டத்தை அறிந்த விபீஷணன் ஆஞ்சநேயரை அழைத்து விபரங்களைக் கூறினான். விபீஷணன் கூறிய செய்தியைக் கேட்ட ஆஞ்சநேயர் உடனே கண்ணும் கருத்

## அகப்பகை ஆறு

காமம் -முதற்பகை-ஆசை-காமத்தால் உயிர் துறந்தார் தசரதர்.
குரோதம்-பொறுமை-சிசுபாலன் மாண்டான்.
உலோபம் - கஞ்சத்தனம் - துரியன் மாண்டான்.
மோகம் - பிறர் பொருள் மீது ஆசை - இராவணன் மாண்டான்.
மதம் - ஆணவம் - சூரபன்மன் அழிந்தான்.
மாற்சர்யம் - விரோதம் - கம்சன் மாண்டான்.

## வேதத்தின் அங்கங்கள்

பின்வருபவை வேதத்தின் அங்கமாகும்.

1) எழுத்திலக்கணம் (சிக்ஷை)
2) சொல்லிலக்கணம் (வ்யாகரணம்)
3) பாவிலக்கணம் (சந்தஸ்)
4) நிகண்டு (நிருக்தம்)
5) கணிதத்துடன் வான சாஸ்த்ரம். (ஜ்யோதிஷம்)
6) கர்மானுஷ்டான முறை (கல்பசூத்திரம்)

தகவல் : திரு. என்.சி. கோபாலன் - சென்னை.

துமாக ராமர், லக்ஷ்மணர்களைப் பாதுகாத்தார். அப்படியும், மாயாவி மயில் ராவணன், ஐராவதன் இருவரும் மாயசக்தியால் ராமலக்ஷ்மணர்களைத் தூக்கிச் சென்று விட்டனர். பாதாள லோகத்தில் மறைத்து வைத்து விட்டனர். உடனே ஆஞ்சநேயர் பாதாளலோகம் சென்றார். அப்போது ஒரு அசரீரி குரல் ஆஞ்சநேயா, அவர்களுடைய உயிர் நாடி பாதாள லோகத்திலுள்ள இரண்டு பெரிய வண்டுகளிடம் உள்ளது. நீ அதனை அழிக்க நரசிம்மராகவும், கருடனாகவும் வாரகராகவும், ஐயக்கிரீவராகவும், இந்த நான்கு அவதாரங்களுடன் உன் முகம் ஒன்று சேர்ந்து பஞ்சமுக ஆஞ்சநேயராகவும், பத்து கரங்களுடன் சென்று கொன்றுவா'' என்று அசரீரி குரல் கூறியது.

மறுகணம் ஆஞ்சநேயர் பஞ்சமுக ஆஞ்சநேயராக அவதாரம் எடுத்து பாதாளலோகத்திற்குச் சென்று மாயாவிகளான அந்த இரு அரக்கர்களின் உயிர்நாடியான இருவண்டுகளை அழித்து ராமர், லக்ஷ்மணர்களை மீட்டார். மாயாவி மயில் ராவணனும், ஐராவதனும் துடிதுடித்து மாண்டனர்.

ராமர் வைகுண்டம் செல்வதற்கு முன் விபீஷணன், இராமரைப் பார்த்து பிரபு தங்களை ஒரு விஷயம் கேட்க விரும்பியுள்ளேன். அதன் உண்மையை அடியேனுக்குத் தெரிவிக்கவேண்டும் என்று கூறி "சுவாமி பாதாள லோகத்திலிருந்து வந்து மாயாவி மயில் ராவணன், ஐராவதன் அவர்கள் இருவரும், உங்கள் இருவரையும் எடுத்துச் செல்லும் போது தாங்கள் மௌனமாகவே இருந்தன் காரணம் யாது? அங்குச் சென்று மகாபலசாலிகளாகியஅவர்களை சிறிது நேரத்திலே கொல்லலாமே ஏன் நீங்கள் அவர்களை கொல்லவில்லை'' என்று விபிஷணர் கேட்டதிற்கு இராமர் விபீஷணனைப் பார்த்து சிரித்துக் கொண்டே விபீஷணு! ஐராவதன், மயில்ராவணன் இவர்களைக் கொல்ல மாருதி கையால் தான் மரணம் ஏற்படவேண்டும் என்று பிரம்மதேவருடைய வரம். ஆதலால் அதை அனுசரித்து அனுமாரின் வருகையை நோக்கி, மயக்கமாகியவன் போல் காத்திருந்தேன். இரண்டாவது பாதாளலோகவாசிகளும், மகாபலசாலிகளான ஐராவதன், மயில்ராவணன் இவர்களிடம் இருந்து அனுமான் இராமரை மீட்டு வந்தான் என்னும் உண்மையை உலகமெங்கும் பரவவேண்டும் என்பதும் ஒரு காரணம். இந்த போரில் மாருதி செய்த சேவை எவரும் மறக்கமுடியாது. இக்காரணங்களைக் கொண்டே இவ்வரக்கர்கள் எங்களை தூக்கிச் செல்லும் போது அவர்களைக் கொல்லவில்லை. முன்பு ஒருதடவை விசுவாமித்திரர் யாகத்தில் என்னுடன் சமர்புரியவந்தமாரிசனை ஒரு பாணத்தால் நூறு காததூரத்துக்கப்பாலுள்ள சமுத்திரத்தில் கொண்டுபோய் தள்ளவில்லையா! என்னுடைய வலிமை இப்போது குறைந்துவிட்டதா? ஒரே நிமிடத்தில் அவர்களை நான் கொல்லவில்லையா? அவர்களை நான் கொல்ல முடியும். மாருதியின் சாமர்த்தியம் உலகில் பரவவேண்டுமென்பதற்காகவே தான் இவ்விதம் செய்தேன்'' என்று ராமர் விபீஷணனைப் பார்த்துக் கூறினார்.

இராமபிரான் கூறியதைக் கேட்ட மாருதி இராமபிரானின் பாதாரவிந்தங்களில் வீழ்ந்து வணங்கி தன்னை ஆசீர்வதிக்கும் படி வேண்டினார். இராமரும் ஆஞ்சநேயரை ஆசிர்வதித்து சேர்த்து அணைத்துக் கொண்டு "ஆஞ்சநேயா நான் எடுத்த அவதாரம் முடிந்துவிட்டது. வைகுண்டம் செல்கிறேன் நீயும் வந்தால் நல்லது'' என்று கூறினார்.

"பிரபு நான் இங்கேயே இருக்கிறேன். இங்கே இருந்து கொண்டே உங்கள் ராமநாமத்தை ஜெபித்துக்கொண்டே இருப்பேன். அதில் கிட்டும் ஆனந்தம் எந்த வைகுண்டத்திலும் இருக்காது'' என்று பணிவுடன் கூறினார் மாருதி. இராமர் மகிழ்ந்து மாருதியை அனைத்து ஆனந்தம் அடைந்தார்.

**"மாருதி தன்னை ஐயன்மகிழ்ந்து**
**இனிது அருளின் நோக்கி**
**ஆர் உதவிடுவதற்கு ஒத்தார் நீ**
**அலால் அன்று செய்த**
**பேர் உதவிக்குயான் செய் செயல்**
**பிறிது இல்லை பைம்பூண்**
**போர் உதவியதின் தோளாய்!**
**பொருந்துறப் புல்லுக**

ஆஞ்சநேயநா! வரப்போகும் யுகத்தில் நான் கிருஷ்ணனாக அவதரிப்பேன். மேலும், மேலும் நீ வேண்டியதை கிருஷ்ணுவதாரத்தின் போது நானே உனக்கு உபதேசிப்பேன் என்று கூறினார்.

மகாபாரதப் போரில் அர்ஜுனனுக்கு கொடியாக இருந்தபோது, பகவான் கண்ணன் அர்ஜுனனை முன் வைத்து அனுமானுக்கு பிரம்மவித்தையை உபதேசித்தார்.

* * *

(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## பெ

| | |
|---|---|
| பெருந்திருப் பாவாடை | வேதம் |
| பெருநகர் | ஸ்ரீரங்கம்; பெரிய நகரம் |
| பெருநாடு | பெரியநாடு |
| பெருநாயகன் | பரதேவதை |
| பெருநிலம் | வீடு, பரமபதம் |
| பெருநிலமங்கை | பூமிப்பிராட்டி |
| பெருநிலன் | பரம்பினபூமி |
| பெருநிலை | பக்ஷபாதம்; காட்சி; விடாப்பிடி |
| பெருநிலை நிற்றல் | சான்ருக நிற்றல்; உதவியாயிருத்தல் |
| பெருநீள் | பெரிய வளர்ச்சி |
| பெருநேர்த்தி | பெருமுயற்சி |
| பெருப்பெருத்த கண்ணுலங்கள் | மிகவும் விசேஷமான கல்யாணங்கள்; செல்வச் செருக்காலே செய்யும் கல்யாணங்களாலும் பெரிதான கல்யாணங்கள் |
| பெரும்பதம் | பெரிய தரம்; பெரிய அதிசயம் |
| பெரும்பனி | மூடுபனி |
| பெரும்பாரிப்பு | பெரும்விழைவு |
| பெரும்பால் | மிகவும் |
| பெரும்பாழ் | பெரும்பரப்பு; மூலம் பிரகிருதி |
| பெரும்பாழ்க்காலத்து | உலகம் அழிந்து கிடக்கிற காலத்து |
| பெரும்பாழி | பெரியபடுக்கை; பள்ளிக்கட்டில் |
| பெரும்பிள்ளை | பெரிய பிள்ளை |
| பெரும்புணர்ப்பு | பெரிய வியாபாரம்; ஆனைத்தொழில் |
| பெரும்புரவு | பெரிய நல்ல தேசம் |
| பெரும்புலரி | புலரி-நாளாய், பெரிய கொண்டாட்டம் |
| பெரும்புலவா நிரை | பெருத்து அழகாயுள்ள பசுக்கூட்டம்; புலவு-அழகு. அளவுபட்டு மட்டமாயிராமல் பெரிதாய், புலம்-புலப்படுவதாய், அழகான ஆநிரை. |
| பெரும்புறக்கடல் | இந்த அண்டகோளத்துக்கு அப்பாற்பட்டுத் தூயநீராய் உள்ள கடல்; எல்லாக கடலுக்கும் புறம்பாய் பெருத்திருக்கிற கடல் போன்ற எம்பெருமான். |
| பெரும்பெயர் | பெரிய திருநாமம்; அரைநொடிகூடவிடாத திருநாமங்கள் |
| பெரும்பொருள் | சிறந்த அர்த்தம் |
| பெருமக்கள் | பரமசேஷிகள்; பெரியோர்; ஸ்வாமிகள்; நித்யசூரிகள். |
| பெருமகள் | பெரிய பெண்பிள்ளை |
| பெருமணி | உயர்ந்த மணி |
| பெருமதமாலை | பெரிய செருக்கோடே மதம் பிடித்த யானை போலே இருக்கிற மாலைக்காலம்; பறைகொட்ட வருமாப் போலே பெரிய கிளர்த்தியோடு கூடின மாலைக்காலம். |
| பெருமயல் | பெரும் பிச்சு, மையல் மயலாயிற்று |
| பெருமாட்டி | ஸ்வாமிநீ; எஜமாநி; |
| பெருமாள் | சக்கரவர்த்தி திருமகன்; இராமன்; சம்பிரதாயப் பெயர் |
| பெருமானுலகு | பரமபதம் |
| பெருமிடறு செய்தல் | உரக்கக்கூவுதல் |
| பெருமிடுக்கன் | மிகுந்தவலிமையுடையவன் |
| பெருமுதலியார் | பெரிய எஜமானர் |
| பெருமுறை | பெரிது என்னும் முறை |
| பெருவிடாய் | மிக்க ஆசை; மிக்க விழைவு |
| பெருவிசும்பு | பரமபதம்; பரமாகாசம் |
| பெருவரங்கள் | பெரிய வரங்கள் |
| பெருவரை | பெரியமலை |
| பெருவழி நாவல்கனியினும் எளியன் | பெரியவழியில் விழுந்து கிடக்கின்ற நாவல்கனியினும் இனியன் |
| பெரிவழியினார் | அயற்சேரியில் உள்ளார் |
| பெருவார்த்தை | சீரியசொல் |
| பெருவிலையன் | மாணிக்கம்; நீலமணி |
| பெருவிரகன் | மிகுந்த திறமையுடையவன் |
| பெற்றம் | பசு; கன்றும் பெருமையும் |
| பெற் பிறவி | விக்ரகம் |
| பெற்ருல் | எண்ணினால் |
| பெற்றதலைவன் | பசுக்களுக்குத் தலைவன் |
| பெற்றத்தாயன் | பசுக்களை ஆளப்பிறந்தவன் |

| | | |
|---|---|---|
| பெற்றி | - | பின்னையும் எண்ணினால், பெருமை; இயல்பு; நஞ்சீயரின் சீடர் |
| பெற்றிமை | - | பெருமை |
| பெற்றூர் | - | தாய்தந்தையர் |
| பெற்றுடைய னாயிருக்கிற | - | பெற்றவனாயிருக்கிற |
| பெறுதவுரோடம் | - | கிடைக்கப்பெறாத ரோஷம் |
| பெறுப்பேறு | - | பெறுதற்கரிய பாக்கியம் (அலப்யலாபம்) |
| பெறுய் | - | போராய் என்பது போல |
| பெராவாணை | - | ஆணையிடத்தகாதது |
| பெறுகிறபேறு | - | அத்வேஷம் (பொறாமையில் லாமை) தொடங்கி கைங் கர்யம் வரை வருகிற பயன்/பலம் |
| பெறுத்தான் | - | பெறுவித்தான் |
| பெறுத்தி | - | பெறச்செய்து |
| பெறுத்து | - | உண்டாக்கி |
| பெறுதி | - | பெறுவாய் |
| பெறுதிர் | - | பெறுதிகொள்; பெறலாம் |
| பெறுதும் | - | பெறவேண்டும் |
| பெறுந்தண் கோலம் | - | பெறு-பெறத்தக்கதாய், தண்-குளிர்ந்த, கண்குளிரப் பார்க்கத்தக்கதான கோலம் |

## பே

| | | |
|---|---|---|
| பேகட்டு | - | மயக்கும் பேச்சு |
| பேகணித்தல் | - | கலங்குதல் |
| பேகணிப்பு | - | நிறவேறுபாடு; துக்கம் |
| பேச்சாட்டுத் துணை | - | பேச்சுத்துணை |
| பேச்சி (பேய்ச்சி) | - | 'பேயின்' என்பதன் பெண் பால் |
| பேச்சுப்படில் | - | பேசினால், பேச்சு உண்டா னால் |
| பேச்சும் அலைந் தவையாய் | - | பொருந்தாத பேச்சையும் உடையவளாய் |
| பேசப்பிக்குகை | - | வார்த்தை சொல்லில் மென்மையாலே வேறுபாடு றுகை |
| பேசநின்ற சிவன் | - | தாமஸ புராணங்களால் முட்டுப் பொறுத்து நின்ற ருத்ரன் (முட்டுப் பொறுத் தல் சப்பைக்கட்டுதல்) |
| பேசநின்ற தேவர் | - | சிவன் |
| பேசியுறங்காள் | - | பேசுவாள்; உறங்காள் |
| பேசிற்றேபேசல் | - | சொன்னதைத் திரும்பச் சொல்லல் |
| பேசுதல் | - | ஒலித்தல் |
| பேசுவாரடியார் கள் | - | பேசுமவர்களுக்கு அடியவ ரானவர்கள் |
| பேசுவான் புகில் | - | பேசப்புகில் |
| பேதுறுவேனே | - | பெண் |
| பேடை | - | ஆதரியாது |
| பேணலது | - | பேணுகை-பின்செல்லுகை. அதுவாகிற நலம் |
| பேணத்தகும் | - | ஆசைப்படத்தகும் |
| பேணன் வாங்கி | - | பேணமல் வாங்கினான் |
| பேணுவாரமுது | - | ஆசைப்பட்டார்க்கெல்லாம் அமுதாயிருப்பவன் |
| பேதங்கள் | - | வாசிகள் |
| பேதநன் கறிவார் | - | கருத்தறிவார்கள் |
| பேதமை | - | அறிவுக்கேடு |
| பேது | - | எளிவரவு; பேதைத்தனம் |
| பேதுற்று | - | ஆசைப்பட்டு; நெஞ்ச ழித்து; கலங்கி |
| பேதுறவு | - | அஞ்சுகை; நெஞ்சழிவு |
| பேதுறுகை | - | பற்றுகை; அறிவுகெடும் துக்கம் |
| பேதுறுவீர் | - | மனங்கலங்கியிருக்கிறீர்கள் |
| பேதை | - | பெண்பிள்ளை; சொற் கேளாத பாலை; பருவம் நிரம்பாதவன் |
| பேதைமங்கை | - | பிறர் குற்றம் அறிகைக்கு அறிவில்லாத பூமிப் பிராட்டி |
| பேதைமை | - | அறிவுக்கேடு |
| பேதையர் | - | அறிவு கேடர் |
| பேதையேன் பேதை | - | பேதையான என்வயிற்றில் பிறந்த பேதை |
| பேய்ச்சி | - | பூதனை |
| பேய்த்தாய் | - | பேயானதாய்; பூதனை |
| பேய்த்தேர் | - | கானல்; கானல்நீர் |
| பேய்ப்பெண்டிர் | - | அறிவுகேடிகள் |
| பேய்மகள் | - | பூதனை |
| பேயரே | - | பைத்தியக்காரர்களே |
| பேயளவு கண்ட பெருமான் | - | பூதனையை அளவிட்டு முடித்தவன் |
| பேயன் | - | பைத்தியம் பிடித்தவன் |
| பேர் | - | திருப்பேர்நகர் என்னும் திவ்யதேசம். அப்பக்குடத் தான் ஸந்நிதி; பேருகை; எண்ணுகை; திரும்பிப்பார்க் கையும் |
| பேர்த்தும் | - | பின்னையும்; வேறும், எண் ணினால் |
| பேர்கின்றது | - | வேறுபடாநின்றது |
| பேர்கின்றவே | - | உலவாநின்றன |
| பேர்த்த | - | விம்மவளர்ந்த |
| பேர்த்தேயும் | - | மறுபடியும், திரியட்டும் |
| பேர்த்தொரு தாய் | - | வேறொருதாய் |
| பேர்ந்தவர்கள் | - | பற்றுள்ள அரக்கர் |
| பேர்ந்திலள் | - | இடம்விட்டு பெயராமல் இருந்தாள் |

| | | |
|---|---|---|
| பேர்ந்தும் பெயர்ந்தும் | - | போயும் வந்தும், மீண்டும் மீண்டும் |
| பேர்ந்தோர்காடு | - | அதுக்குமேலே ஊருகிற வண்டி |
| பேர்வாமனன் | - | பிரசித்தனான வாமனன் |
| பேர் வானவர்கள் | - | பெரிய வானவர்கள் நித்ய சூரிகள் |
| போகம் | - | திருப்பேர்-திவ்ய தேசம் - அப்பக்குடத்தான் |
| பேரகலம் | - | விசாலமான இடம்/ இருதயம் |
| பேரணி | - | பின்னணி; பெரிய படை; பெரிய அழகு |
| பேரணிந்து | - | பெருக்கத்திரண்டு |
| போர நிற்க | - | பின்வாங்கி நிற்க |
| பேரமர்க்கண் | - | பெரிய யுத்தபூமியில் |
| பேரமர்காதல் | - | பெரிதாய் அமர்விளைந்த காதல் - கிடையாவிடினும் விடமாட்டாத காதல் |
| பேரரசு | - | பெரிய ஸ்வாமி |
| பேரருள் | - | இயற்கையான - ஒரு காரணமின்றி வழங்கும் அருள் |
| பேரழகு | - | சமுதாய சோபை-முழுமைத் தோற்றம் |
| பேரழல் | - | வடவாமுகாக்நி |
| பேரளவு | - | பேரறிவு |
| பேரன்பில் | - | அன்பில் என்ற திவ்யதேசம் |
| பேரவிருத்தல் | - | பிரிந்திருத்தல் |
| பேரா | - | வேறு நிலையடைந்து; பேருகை, சலிக்கையாய் வேறு நிலையை அடைந்து என்றபடி |
| பேராளன் | - | பெருமையுடையவன்; ஸர்வேச்வரன், திருநாமங்களை உடையவன் |
| பேராமை | - | நீங்காமை |
| பேராயம் | - | தோழிமாருடைய பெருந்திரள் |
| பேராயன் | - | முக்கிய இடையன் |
| பேராழம் | - | அதிகமான ஆழம் |
| பேரிட்டு | - | பழியிட்டு |
| பேரிடச்சுழி | - | பெரியதுக்க சக்ரம் |
| பேரிலை | - | பெரிய இலை; முகிழ்விரிகிற இலை; எதிர்மறையாய் சிறிய இலை |
| பேரிளம் கொங்கை | - | முலை; பெருத்திருக்கையில் இளமையும் கிடக்கும் |
| பேரீஞ்ஞூறு | - | பெயர் ஆயிரம் |
| பேரும் பலபல | - | வீரப்பேர்; சீலப்பேர் என்று பல; கோவிந்தன்-சீலப்பேர்; மதுசூதன்-வீரப்பேர் |
| பேருளான் | - | திருப்பேர் நகர் எம்பெருமான் |
| பேரெழுதி | - | திருநாமத்தை எழுதி |
| பேரே வரப்பிதற்றல் | - | அவன் தானே வர, வரும்படி அடைவு படத்திருநாமங்களைச் சொல்லுதல் |
| பேரேன் | - | போகேன் |
| பேரோலக்கம் | - | மகாசபை; பெரிய அவை |
| பேற்றின்பம் | - | பெறுகிற இன்பம் |
| பேழ் | - | பெருமை |
| பேழ்வாய் | - | பெரியவாய் |
| பேழை | - | பெட்டி |
| பேற்றுமனிச்சர் | - | வேற்றுமனிச்சர் |
| பேறு | - | லாபம், பெறப்படுவது |

(தொடரும்)

# மதுரகவி தாஸர்

திருமதி. இரா. ருக்மிணி கிருஷ்ணு - பாண்டிச்சேரி.

நாடாத மலர் நாடி நாள் தோறும் நாரணன் தன் வாடாத மலரடிக்கீழ் இருக்க வேண்டிய ஜீவகோடிகள் படைத்தவனை நினையாமல் உண்டியே உடையே என ஓடிக் கொண்டும், கண்டதே காட்சி கொண்டதே கோலம் உண்டதே போகம் என்றும் திரிவதைக் கண்டு பொறுக்காமல் ஸர்வேஸ்வரனான எம்பெருமான் ராமகிருஷ்ணுதி அவதாரங்களை எடுத்தான். அதனாலே திருத்த முடியாத மக்களையும் திருத்த எண்ணி ஆழ்வார்களையும், ஆசாரியர்களையும் அவதரிப்பித்தான்.

அதன்படியே கலியுகம், 4118 வருஷங்கள் கழிந்த பிறகு பிங்கள வருஷத்தில் சித்திரை மாதம் திருவாதிரை நக்ஷத்திரத்தில் ஶ்ரீராமாநுசர் அவதாரம் பண்ணினார். ஒரே ரூபத்தில் உபதேசமும், அனுஷ்டானமும் செய்ய முடியாதாகையால் பத்ரிகாசிரமத்தில் எம்பெருமான் உபதேசமும், அனுஷ்டானமும் நடத்திக்காட்ட தானே நரநாராயணர்களாய் நின்றது போல ஶ்ரீராமாநுசராக அவதாரம் பண்ணின ஆதிசேஷனே அனுஷ்டானத்தையும் பண்ண வேண்டி காவேரிக் கரையில் சிறுபுத்தூரில் கலி பிறந்து 4154 வருஷங்கள் கழித்து விஜய வருஷத்தில் சித்திரை மாதம் சித்திரை நக்ஷத்திரத்தில் பாரத்வாஜ கோத்திரத்தில் கேசவாசார்யாருக்கும் திருக்குமாரராக அவதரித்தார். அவரே அனந்தாழ்வான். தக்க வயது வந்தவுடன் ஶ்ரீராமாநுசரை அடைந்து அவரை குருவாகப் பற்றினார்.

உடையவருடைய காலக்ஷேபக் கோஷ்டியில் ஒருநாள் 'ஒழிவில் காலமெல்லாம்' என்கிற திருமலை பதிக காலக்ஷேபத்தின்போது 'சிந்துபூ மகிழும் திருவேங்கடம்' என்கிற இடத்தில் உடையவர், புஷ்ப மண்டபம் என்று பிரஸித்திபெற்ற திருமலையில் புஷ்ப கைங்கர்யம் செய்வார் யாரேனும் உண்டோ? என்று கேட்க, அங்குள்ளவர்கள் திருமலையிலுள்ள குளிர், ரங்கநாதனுடைய பிரிவு, எல்லாவற்றிற்கும் மேலாக உடையவருடைய பிரிவு, இதற்கு அஞ்சி யாருமே தயாராக இல்லை. அப்போது அனந்தாழ்வான் உடையவருடைய வாக்கு வீணுகி விடக்கூடாதே! என்று எழுந்து "ஸ்வாமி! அடியேன் தயாராக உள்ளேன்" என்று கூறினார். உடனே உடையவரும் அவரை அணைத்து "இந்த கோஷ்டியில் வேறு ஆண்பிள்ளைகளே இலலை. நீர் ஒருவரே ஆண்பிள்ளை. நீரே 'அனந்தாண்பிள்ளை' என்று அவரைக் கொண்டாடி திருமலைக்கு அனுப்பிவைத்தார்.

இவ்வாறு உடையவருடைய நியமனத்தால் அனந்தாழ்வான் திருமலை எழுந்தருளி பரிபூர்ண கர்ப்பிணியான தன் மனைவியையே மண் சுமக்கச் செய்து, தான் நந்தவனம் ஏரி முதலானவற்றை உண்டு பண்ண ஆரம்பித்தார். அப்போது திருவேங்கடமுடையான் அப்பெண் பிள்ளையின் துன்பம் கண்டு ஒரு பிரஹ்மசாரி ரூபத்தில் உதவ வந்தார். அனந்தாழ்வானோ அவரை உதவ விடாமல் தடுத்தார். இருந்தும் கேட்காமல் பிரஹ்மசாரி வேஷம் பூண்ட திருவேங்கடமுடையான் மீண்டும் உதவ வர தொண்டுக்கு இடையூறு பண்ணுகிறுனே என்ற கோபத்தால் கையிலிருந்த கொட்டாலே அவரை அடிக்க, மோவாயிலிருந்து இரத்தம் பெருகிற்று. இன்றும் திருவேங்கடமுடையானுக்கு மோவாயில் உள்ள காயம் அனந்தாழ்வானிடம் பட்டது. பின்பு அனந்தாழ்வான், அடிபட்டவர் பெருமாள் என உணர்ந்து மன்னிப்புக் கேட்டு மருந்துகளாலே ரத்தப் பெருக்கை நிறுத்தினார். இதிலிருந்து ஆசார்யனிட்ட கைங்கர்யத்தில் அனந்தாழ்வானுக்கு எவ்வளவு ஊற்றம் என்பது தெரிய வருகிறது.

ஒரு சமயம் அனந்தாழ்வான் மலர்மாலை தொடுத்துக்கொண்டிருக்கும் போது திருவேங்கடமுடையான் அவரையும் அவருடைய ஆசார்ய பக்தியையும் சோதிக்க எண்ணி அர்ச்சகர் மூலமாக அவரை அழைத்துவரச்சொன்னார். அர்ச்சகரும் அனந்தாழ்வானைக் கூப்பிட அவரோ, 'இப்போது அவகாசமில்லை, மாலை தொடுத்து விட்டுப் பின் வருகிறேன்", என்று எம்பெருமான் கட்ட

ளையை விட் கைங்கர்யத்தி லேயே ஊறி இருந்தார். மாலை களை தொடுத்து முடித்துவிட்டு அவற்றை தலையில் சுமந்து கொண்டு திருவேங்கடமுடையா னிடம் சென்றார். ஆனால் திரு வேங்கடமுடையானோ ஏதும் பேசாமல் மௌனமாயிருந்தார். அதுகண்டு, ஸ்வாமி! கோபத் திற்குக் காரணம் என்ன? என் றார் அனந்தாழ்வான். திரு வேங்கடமுடையான், "பிரஹ்ம ருத்திராதிகளாலும் மீற முடி யாத நம் ஆணையை மீறி னீர், இம்மலையிலிருந்து உம் மைத் துரத்தினால் என்ன செய் வீர்? இந்த மாலைகள் எனக்கு வேண்டாம். நீரே கொண் டுபோம்" என்ன, அனந்தாழ் வான் சிரித்துக்கொண்டு "உமக் காக அடியேன் இங்கு வர வில்லை, உடையவருடைய நிய மனம், மலர்கள் மலர்ந்து மணம் வெளியே போகுமுன் அவற் றைத் தொடுத்து உமக்கு ஸமர்ப் பிக்க வேண்டும் என்பது ஆசா ரியன் கட்டளை. நீர் கூப்பிட்ட போது வந்தேனா கில், மலர்கள் மலர்ந்து மணம் வெளியே போய்விடும். ஆசா ரிய கட்டளையை மீறியவனா வேன். அதுமட்டமல்ல, ஏ, திரு வேங்கடமுடையானே! 'பரன் சென்று சேர் திருவேங்கடமா மலை' என்ற ஆழ்வார் பாசு ரத்தை மறந்தீரோ? நீரும் இம் மலைக்கு வந்தேறியவர் தான். அடியேனும் இம்மலைக்கு வந் தேறியவன்தான், ஆக இருவ ருமே மலைக்கு விருந்தாளிகள். நீர் கொஞ்சநாள் முன்பு வந் தீர். நான் சற்று நாள் பின்பு வந்தேன். அதை வைத்துக் கொண்டு நீர் என்னைப் போகச் சொல்ல முடியுமோ?" என் றார். திருவேங்கடமுடையானும் அவரை கட்டியணைத்து, அவ ரது ஆசாரிய பக்தியை மெச் சினார்.

மதுரகவியாழ்வார் எப்படி 'தேவு மற்றறியேன் குருகூர் நம்பி' என்று நம்மாழ்வாரையே பற்றி நின்றாரோ அதுபோல அனந்தாழ்வானும் உடையவ ரையே பற்றி நின்றார். தன் னைக் கூறும்போது கூட 'மதுர கவி தாஸன்' என்றே கூறிக் கொண்டார். இருவருக்கும் உண் டான ஒரு ஆச்சர்யமான ஒற் றுமை என்னெனில் இருவருக் கும் ஒரே திருநக்ஷத்திரம் சித்தி ரையில் சித்திரையே. ஆக இவ ருக்கே 'மதுரகவி தாஸன்' என்ற பெயர் மிகப் பொருத்தம்.

திருவேங்கடமுடையானே ஒரு சமயம் ஸ்ரீரங்கத்திலிருந்து வந்த அனந்தாழ்வான் சீடர் களிடம் தன்னை 'அனந்தாழ் வான் சிஷ்யன்' எனக்கூற, அவர் களும், 'ஆசாரியன் தனியன் கூறு' என்று சொல்ல திருவேங் கடமுடையான் அனந்தாழ்வான் விஷயமாக இருதனியன்களை அருளிச்செய்தார் என்பது பிர ஸித்தம்.

திருவேங்கடமுடையானே அனந்தாழ்வாருடைய சிஷ்யன் என தன்னைக் கூறி யதிலிருந்து அனந்தாழ்வான் பெருமை தெளிவாகப் புரிகிறது.

* * *

## விவேகம் வரும் மார்க்கம்...!

மானுடம் செய்த பூர்வ புண்ணிய வாசனையினால் சற்கு ணம் தோன்றும்; அந்த சற்குணமே அக்ஷர ஞானம் வளரத் துணை செய்யும்; அந்த அக்ஷர ஞானத்தால் சாஸ்திர, புரா ணங்களின் அர்த்தசார நுட்பங்களால் தெளிவு ஏற்பட உதவும். அந்தத் தெளிவின் எதிரொலியாய் சற்ஜன சகவாசம் ஏற்படும். சற்ஜண சகவாசம் ஏற்பட்டால்... அஞ்ஞானம் அகல வழிபிறக் கும். அஞ்ஞானம் எனும் களைகள் பிடுங்கப்பட்டால் ஞான போதம் அமிர்தப்பயிராய் வளரும். ஞானாபோதம் வளர்ந்தால் அபேத ஞானம் நீங்கும். உயரிய சூட்சுமம் போதம் தோன்றும். சூட்சும போதம் வளர்ந்தால் சொரூபாக்கியானம் சித்திக்கும். சொரூபாக்கியானம் சித்தி பெற்றால், அரூப ஞானம் சித்திக்கும். அரூபஞானம் கைகூடிடில் சித்தாந்த... வேதாந்த... மந்திர நிலைகள் ஆகிய மூன்றிலும் அதன் ஆதி அந்தம் இன்னது தான் என்ற விவேக ஞானம் ஆயிரம் இதழ் தாமரை போல் நம் அறிவில் மலர்ந்து நன்கு பிரிகாசிக்கும்.

இத்தகைய மகா அற்புத விவேக ஞானம். நாம் நித்திய விருத்தியான அனுஷ்டான கர்மங்களை வழுவாது அனுஷ் டிப்பதன் மூலம்... அதன் பெரும்பயனான நம் ஜீவனுக்கு "முக்திப்பேற்றை" தரவல்ல ராஜபாட்டையில் நம்மை கொண்டு போய்ச் சேர்க்க உதவும். ஓம் தத்ஸத்.

-'ஞானக்கேணி' என்னும் நூலிலிருந்து

தகவல் : மீ.ப. நாராயணன் - மதுரை.

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமாநுஜர்

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

திருமலைமேல் வெகுதூரம் உயரமான பகுதிகளையெல்லாம் கால்நடையாகவே கடந்து சென்றார். இதனால் பசியும் களைப்பும் மிகுந்தது. அதே வேளையில் மலையிலிருந்து முதியவர் ஒருவர் பிரசாதத்தையும் பெருமாள் தீர்த்தத்தையும் கொண்டு வந்தார். அவற்றை ஏற்குமாறு பிரார்த்தித்தார். வயதில் முதியவரும், ஞான முதிர்ச்சியுற்றவருமாகிய அப்பெரியார் வேறுயாருமல்லர். இராமாநுசரின் மாதுலரான (தாய்மாமன்) ஸ்ரீசைலபூரணர் எனப்படும் பெரிய திருமலைநம்பிகளே ஆவார்.

ஸ்ரீசைலபூரணர் அளித்த பிரசாதத்தை இராமாநுசர் ஏற்றுக்கொண்டார். பக்தி பூர்வமாகப்பெற்ற பிரசாதத்தைப் புசித்துச் சற்று நேரம் இளைப்பாறிய பின்னர் மலையேறித் திருவேங்கடவன் திருச்சந்நிதியை அடைந்தார். அப்போது அனந்தாச்சார்யார் வந்து வணங்கி நின்றார். தமது பேரன்புக்கு உகப்பான அவரைக் கண்டதும் அளவில்லாத ஆனந்தம் கொண்டார். பின்னர் கோனேரியில் நீராடித் திருவேங்கடப் பெருமானைக் கண் குளிரக் கண்டு ரசித்தார். அனந்தாழ்வானுடைய திருப்பணிகளைக் கண்டு புளகாங்கிதம் கொண்டு அனந்தாழ்வாரை ஆசிர்வதித்து பெறற்கரிய சீடரைப் பெற்றேம் என்று பெருமிதம் எய்தினார்.

திருமலையில் மூன்று நாள்கள் தங்கியிருந்து வேங்கடவனைத் தரிசித்தும், அனந்தாழ்வார் பணிகளில் மனம் மகிழ்ந்தும் வாழ்ந்த இராமாநுசர் நான்காம் நாள் திருமலையிலிருந்தும் கீழே இறங்கி வந்தார். திருப்பதியிலுள்ள தம்மா



துலரான திருமலைநம்பி திருமாளிகையிலே வந்து வணங்கினார்.

திருமலைநம்பிகளின் அத்யந்த சீடராகிய கோவிந்தர் அப்போது நம்பியின் மாளிகையிலேயே வாழ்ந்து வந்தார். குருபக்தியிற் சிறந்து விளங்கிய கோவிந்தர் தம் தமையனாகிய இராமாநுசரைக் கண்டு ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார். தம் உயிரைக் காத்தவரும் தம்பியுமாகிய கோவிந்தரைக் கண்டதும் இராமாநுசர் கொண்ட ஆனந்தத்துக்கு எல்லையுமுண்டோ?

சைவராக இருந்த கோவிந்தர் திருமலைநம்பிகளிடம் வைணவ தீட்சை பெற்று அவரை ஆச்சார்யராகப் பற்றி அளவிடற் கரிய குரு பக்தியுடன் வாழ்ந்துவந்தார். கள்ளமற்ற வெள்ளை உள்ளத்துடன் இளம் பிள்ளையைப்போலக் கோவிந்தர் காணப்பட்டார்.

திருமலையிலிருந்து இறங்கிவந்த இராமாநுசர் திருமலை நம்பியிடம் இராமாயணம் பயின்று வந்தார். எளிமையுடன் ஆழ்ந்த நுண்பொருளை பிரியமுடன் கூறும் திருமலைநம்பிகளின் பொருள் கூறும் போக்கு இராமாநுசரைப் பெரிதும் கவர்ந்தது. எனவே, மேலும் மேலும் கற்க வேண்டும் என்னும் அவா இராமாநுசருக்கு அதிகரித்தது.

இவ்வாறு பயின்று வருங்கால், தம்பி கோவிந்தருடைய நெறிமுறைகள் சிலவற்றைக் கண்டு இராமாநுசர் திகைத்துப்போனார்.

ஒருசமயம், திருமலைநம்பிகளின் படுக்கைமீது கோவிந்தர் படுத்திருப்பது கண்டு இராமாநுசர் திடுக்குற்றார். இச்செய்தியைத் தம் ஆச்சார்யரிடம் நடந்தவாறே கூறினார். நம்பிகளும் கோவிந்தரை அழைத்து, "இத்தகைய செயலுக்கு நரகமே கிட்டும் என்பதை அறிவாயோ?" என்று கேட்டார்.

"நரகமே கிட்டும் என்பதறிந்தே இவ்வாறு நாள்தோறும் செய்துவருகிறேன். படுக்கை மெத்தென்றிருக்கிறதா? என்று நான் சோதித்துப் பார்க்கவே இவ்வாறு செய்துவருகிறேன். நன்றாகத் தாங்கள் உறங்கவேண்டும் என்பதற்காகவே இவ்வாறு செய்வதை என் கடமையாக

வைத்துள்ளேன்'' என்று கோவிந்தர் பணிவுடன் கூறினார்.

குருவின்பால் வைத்திருக்கும் பேரன்பைக் கண்டு இராமாநுசரும் ஆச்சார்யரும் அகமகிழ்ந்து போயினர்.

மற்றொரு சமயம், நல்லபாம்பு ஒன்றின் வாயில் கோவிந்தர் தம் கையை விடுவதைக் கண்டு இராமாநுசர் திடுக்கிட்டார்.

"பித்தரும் இத்தகைய செயலைச் செய்ய அஞ்சுவரே! உம்மை ஒன்றும் செய்யாத அந்த நல்லபாம்பின் வாயில் கையை விடுவானேன்? உம் செயல் அதற்கு வருத்தத்தை அளிக்காதோ? அதனால் உமக்குப் பாவமன்றோ வந்து சேரும்!'' என்று இராமாநுசர் தம் தம்பி கோவிந்தரைக் கடிந்து கொண்டார்.

"அண்ணா! இந்தப் பாம்பின் தொண்டையில் முள் ஒன்று சிக்கிக் கொண்டிருக்கிறது. அதனால் இந்தப் பாம்பு பெரிதும் துன்புறுகிறது. இதனைக் கண்டேநான் அதன் தொண்டையில் இருக்கும் முள்ளை எடுக்கவே அதன் வாயில் என் கையை விட்டேன்!'' என்று கோவிந்தர் பதில்கூறினார்.

முள் எடுக்கப்பட்டதும் அந்தப் பாம்பு வலி நீங்கிப்படுத்திருப்பதை இராமாநுசர் கண்டார். கோவிந்தரின் எல்லையற்ற சீவ காருண்யச் செயலைப் பலபடப் பாராட்டினார். தம்பியின் பால் மேலும் பலமடங்கு மதிப்பும் அன்பும் கொள்ளலானார்.

இவ்வாறு ஓராண்டு கழிந்தது. இராமாயணத்தைத் தம் ஆச்சார்யரிடம் தெளிவாகக் கற்றுத் தேர்ந்து முடித்தார். குருவிடம் விடைவேண்டிநின்றார்.

"உனக்கு விருப்பமானதை எதுவாயினும் என்னிடமிருந்து பெற்றுச் செல்லலாம்'' என்று திருமலைநம்பிகள் கூறினார். தம்பி கோவிந்தரை அனுப்பியருளுமாறு இராமாநுசர் வேண்டி நின்றார். திருமலைநம்பியும் உவப்புடன் கோவிந்தரை அனுப்பிவைத்தார். கோவிந்தருடன் புறப்பட்ட இராமாநுசர் கடிகாசலம், திருப்புட்குழி முதலான தலங்களைத் தரிசித்த வண்ணம் காஞ்சியை அடைந்தார்.

# எம்பார்!

இராமாநுசரும், கோவிந்தரும் காஞ்சியை வந்தடைந்ததும் வரதராசப் பெருமாளை வணங்கி நின்றனர். பின்னர், இராமாநுசர் திருக்கச்சி நம்பிகளிடம் கோவிந்தரை அறிமுகப்படுத்தினார். தம்பி கோவிந்தரின் அளவற்ற குருபக்தியையும், சீவகாருண்யத்தின்பால் இருக்கும் ஈடுபாட்டையும் திருக்கச்சி நம்பிகளிடம் புகழ்ந்துரைத்தார். மேன்மேலும் கோவிந்தரது குருபக்தி மேலோங்க ஆசீர்வதிக்குமாறும் வேண்டிக்கொண்டார்.

இவ்வாறு காஞ்சியில் வாழ்ந்திருக்கையில், தன் ஆச்சார்யரைப் பிரிந்து வந்தமையால் கோவிந்தர் பெரிதும் ஏக்கமுற்றார். அவரது உடல் வெளுக்கலாயிற்று. முகம் சோர்வுற்றது. இவற்றின் காரணத்தை உய்த்துணர்ந்த இராமாநுசர் இரண்டு வைணவர்களுடன் கோவிந்தரைத் திருப்பதிக்கு அனுப்பிவைத்தார்.

பின்னர், இராமாநுசர் திருக்கச்சிநம்பிகளுடன் வாழ்ந்திருந்து வரதராசப்பெருமாளை வழக்கமாக வழிபட்டுக் கொண்டுவந்தார்.

இராமாநுசரைப் பிரிந்து குருவைக் காணவேண்டும் என்னும் பேரவாவுடன் கோவிந்தர் திருப்பதி சென்றடைந்தார். தம் ஆச்சார்யரான திருமலைநம்பிகளின் திருமாளிகை வாயிலில் சென்று வணங்கி நின்றார். இதனையறிந்த நம்பிகள் கண்டும் காணாததுமாக நின்றார். எனவே அங்குள்ளார் சிலர் திருமலைநம்பிகளின் திருமாளிகைக்குள் சென்று கோவிந்தரை ஏற்குமாறு வேண்டினர். நம்பிகள் இதனை ஏற்கவில்லை.

திருமலைநம்பியின் பத்தினியார் தம் துணைவரிடம் கோவிந்தரைப் பற்றிப் பரிந்துரைக்கலானார்: "ஸ்வாமி! அவரோடு பேசாமல் வேண்டுமானாலும் இருந்துவிடுங்கள். ஆனால், ஸ்ரீபாத தீர்த்தமும், திருவமுதும் தந்தருள வேண்டாமோ?'' என்று கனிவுடன் வேண்டினார். "விற்ற பசுவுக்குப் புல் அளிப்பவருமுண்டோ? என்று கடிந்துகூறித். திரும்பவும் அவனை இராமாநுசரிடம் போகச் சொல்லுங்கள் என்று கூறிவிட்டு அங்கிருந்தும் அகன்று போனார்.

கோவிந்தர் ஏதும் அருந்தாமலேயே தம்முடன் வந்த வைணவர் இருவர் துணையுடன் மீளவும் காஞ்சிக்கு வந்தார். இராமாநுசரின் திருவடிகளைத் தம் கைகளால் இறுகப் பற்றிக் கொண்டார். "அடியேனைத் தம்பி என்று பாராது சீடன் என்றே ஏற்று அருள்புரிய வேண்டும்'' என்று விண்ணப்பித்துக்கொண்டார். திருமலை நம்பிகளிடம் எத்தகைய குருபக்தியுடன் ஒழுகிவந்தாரோ அதே பக்தியுடன் இராமாநுசரிடமும் நடந்துவந்தார்.

சிலநாள்கள் சென்றன. இராமாநுசர் கோவிந்தரையும் மற்

ருமுள்ள தம் சீடர்களையும் அழைத்துக்கொண்டு திருவரங்கம் நோக்கிப் புறப்பட்டார். வழியில் அஷ்டசகஸ்ரம் என்னும் கிர்ராமத்தில் யக்ஞேசர் இல்லத்தில் ஒரு நாள் மட்டுமே தங்கியிருந்து யக்ஞேசர் அளித்த விருந்தினை ஏற்றூர். பின்னர், அங்கிருந்தும் புறப்பட்டுச் சென்று திருவரங்கம் சென்றடைந்தார்.

தன் அம்மானாகிய திருமலை நம்பிகள் தன்னை வரவேற்காதது குறித்துக் கோவிந்தர் கவலை கொள்ளவில்லை. தன் அண்ணனாகிய இராமாநுசரைக் குருவாக அடைந்து உய்வு பெறவேண்டும் என்பதே தன் அம்மானாரின் திருவுளக் கருத்து என்பதைக் கோவிந்தர் உய்த்துணர்ந்து ஆறுதல் கொண்டார். மனோவாக்குக் காயங்களால் முழுமனத்துடன் இராமாநுசருக்குக் கைங்கர்யம் செய்துவந்தார்.

இராமாநுசரின் தேவைகளை அறிந்து ஏவாமுன்னரே பணிவிடை செய்வதில் நிகரற்று விளங்கிய கோவிந்தரின் அருங்குணங்கண்டு மற்ற சீடர்கள் அழுக்காறு கொண்டனர். ஒரு நாள், சீடரொருவர் கோவிந்தரைப் பெரிதும் புகழத் தொடங்கினார். கோவிந்தரும், "என்னுடைய அருங்குணம் பெரிதும் புகழ்ச்சிக்குரியதே!" என்று கூறினார்.

இச்செய்தியைச் சீடர்களில் சிலர் இராமாநுசரிடம் சென்று கூறினார். இராமாநுசர் கோவிந்தரை அழைத்து "உன்னைப் புகழ்ந்து கூறியவரிடம் அதுகேட்டு உனக்கு அகந்தை உதித்ததுண்டா?" என்று வினவினார்.

"வணக்கத்திற்குரிய மகானுபாவரே! எண்பத்து நான்கு லட்சம் யோனிகளில் மாறிமாறிப் பிறக்கும் இப்பிறவி எத்தகையது என்பதைத் தங்களைப் போன்ற மகான்களே அறிய முடியும். அளவில்லாப் பிறவிகளுக்குப் பிறகுதான் அறிவுள்ள இம்மானிடப்பிறவி வாய்க்கிறது. பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் ஆன்ம உயர்வு கருதி உயிர்கள் உழைப்பதில்லை. தங்களைக் கீழ்நோக்கியே செலுத்துகின்றன. அத்தகைய உயிர்களை உய்வு பெறச் செய்வது தேவரீர் போன்ற மகான்களின் பெருங்கருணையேயன்றோ? இயல்பிலேயே அறிவீனனாகிய என்னைப் பிறர் புகழ்ந்தால் அது தேவரீரைப் புகழ்வதாகவே கருதி மகிழ்வேன்" என்று பணிவுடன் பதிலளித்தார்.

கோவிந்தர் பதிலைக் கேட்டு அனைவரும் வியப்பும் மகிழ்வும் கொண்டனர்.

மற்றுமொரு நாள், கோவிந்தர் வேசியின் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். இச்செய்திச் சிலர் இராமாநுசரிடம் தெரிவித்தனர். கோவிந்தரை அழைத்து இராமாநுசர் கண்டித்தார்.

"ஆச்சார்யரே! தங்களின் இனிய நற்குணங்களை அந்த வேசி அமுதகானமாகப் பாடிக் கொண்டிருந்தாள். முடியும்வரை கேட்டு மகிழ அந்தத் திண்ணையில் அமர்ந்திருந்தேன்!"

கோவிந்தரின் பதிலைக் கேட்டுக் கூடியிருந்தவர்கள் "குருபக்தியில் சிறந்துவிளங்கும் இவருக்கு இணையும் உண்டோ?" என்று வியந்தனர்.

திருமணம் புரிந்து கொண்டிருந்தும் மனைவியுடன் கூடி வாழாமல் ஆச்சார்ய கைங்கர்யத்திலேயே மூழ்கியிருந்த கோவிந்தரை இல்லறத்தில் நாட்டங் கொள்ளச் செய்ய வேண்டுமென்று அவரது தாயார் விரும்

## திருநீற்றின் பலன்

1) உடல்நாற்றம் போகும்.
2) நோய்க்கிருமிகள் சாகும்.
3) தீமைகள் அழியும்.
4) வியாதிகள் ஒழியும்.
5) உடம்பு தூய்மையாகும்.
6) பில்லி சூனியம் அகலும்.
7) முகத்திற்குப் பொலிவு தரும்.
8) நினைவாற்றல் பெருகும்.
9) புத்தி கூர்மையாகும்.
10) ஞானம் பெருகும்.
11) பாவங்கள் தேயும்.
12) பரமனடி சேர்க்கும்.

தொகுப்பு: திரு. சதயன் - காஞ்சிபுரம்.

பினார். தன் மனக்கருத்தை இராமாநுசரிடம் கூறினார்

இராமாநுசரும் கோவிந்தரை அழைப்பித்து அன்றிரவு மனைவியுடன் கூடியிருக்குமாறு அறிவுரை புகன்றார். கோவிந்தரும் அன்றிரவு தன் மனைவியுடன் படுத்துறங்கச் சென்றார். ஆனால், இரவு முழுவதும் ஆண்டவனின் அருட்குணங்களின் சிறப்புப் பற்றியே பேசிக் காலங் கழித்தார்.

இச்செய்தியை அறிந்த இராமாநுசர் கோவிந்தரை அழைத்தார். நடந்ததைக் கேட்டார்.

"ஆச்சார்யரே! தங்கள் கட்டளைப்படியே இரவு என் மனைவியுடன் படுக்கையறைக்குச் சென்றேன். அப்போது என்னிடமிருந்த தாமச குணம் முற்றிலும் நீங்கிவிட்டது. என் உள்ளத்தில் அந்தர்யாமியாக எழுந்தருளியிருக்கும் பகவானின் அருட்பேரொளி தோன்றியது. எனவே, காமம் முதலான எண்ணங்கள் என் உள்ளத்தே சிறிதும் தோன்றுமற் போய்விட்டது. நான் என்ன செய்வது!" இவ்வாறு கோவிந்தர் பதில்கூறியது கேட்டு இராமாநுசர் மேலும் கூறலானார்.

"உன் உள்ளம் இவ்வாறு செயல்பட்டால் உனக்கு இல்லறம் ஏற்றதன்று. மனைவியுடன் இருந்தால் இல்லற தர்மத்தை நீக்கிவிட்டு வாழ்வது முறையன்று. எனவே, நீ சந்நியாசம் மேற்கொள்ளுதல் தகுதியும் முறையுமாகும். கிரகஸ்தனாக இருந்து கொண்டு சந்நியாச வாழ்க்கை வாழ்வது விதிகளுக்குப் பொருந்தாது. இந்திரியங்களை வெல்லும் ஆற்றல் உனக்கிருந்தால், சந்நியாசத்தை மேற்கொள்வதே உத்தமமான செயல்!"

இராமாநுசரின் அறிவுரையைக் கேட்ட கோவிந்தருக்கு ஆனந்தம் பொங்கியது. சந்நியாசம் மேற்கொள்ளவே தான் தயாராக இருப்பதாகப் பதிலளித்தார்.

எனவே கோவிந்தரின் தாயாருடைய அனுமதியோடு திரிதண்டம், கமண்டலம் அளித்து அவருக்குச் சந்நியாசியாகும் கிரியைகளைச் செய்து முடித்தார். தம் சீடர்கள் தமக்கிட்டிருந்த "எம்பெருமானார்" என்னும் திருநாமத்தையும் சூட்டினார்.

தாஸ்ய பக்தியின் வடிவமாக விளங்கிய கோவிந்தர் தம் ஆச்சார்யரின் திருப்பெயரை ஏற்க அஞ்சி, எம்பெருமானார் என்னும் திருநாமத்தைச் சற்று மாற்றி "எம்பார்" என்றே வைத்துக் கொண்டார்.

## ஸ்ரீபாஷ்யம் அருளல்

திருவரங்கத்தில் இராமாநுசர் தம் சீடர்களுடன் ஆனந்தமாகக் காலம் நடத்தி வந்தார். திருவரங்க மடத்தில் இவருக்கு ஆயிரக்கணக்கான சீடர்கள் இருந்தனர். அவர்களுள் முக்கியமான எழுபத்துநான்கு பேர் 'சிம்மாசனாதிபதிகள்' அல்லது பீடாதிபதிகள் என்று அழைக்கப்பட்டனர்.

கூரத்தாழ்வான், சுந்தரத்தோளர், சொட்டைநம்பி, சௌமிய நாராயணர், யக்ஞமூர்த்தி, கோவிந்தர் முதலோருடன் பக்தி, தத்துவ விளக்கம், சாத்திரவாதம் முதலியன குறித்து இராமாநுசர் உரையாடுவதன் மூலம் ஆன்ம நிறைவோடு வாழ்ந்து வந்தார்.

ஆளவந்தாரின் திருவுள்ளக் குறையைப் போக்கத் தாம் முன் செய்த பிரதிக்ஞை இராமாநுசருக்கு இப்போது நினைவுக்கு வந்தது. பிரம்ம சூத்திரத்திற்கு ஸ்ரீபாஷ்யம் செய்யப்போவதாகக் கூறியிருந்த நினைவு வந்தது. அதற்கான முயற்சிகளை மேற்கொள்ளலானார்.

ஸ்ரீபோதாயன மகரிஷி செய்துள்ள கிரந்தம் கிடைத்தாலன்றி பிரம்மசூத்திரத்திற்கு விளக்கவுரை எழுத முடியாது. அந்தக் கிரந்தம் காஷ்மீர மண்டலத்திலுள்ள சாரதாபீடத்தில் உள்ளதென்று அறிந்து கொண்ட இராமாநுசர் தம் சீடர்களுடன் யாத்திரையாகப் புறப்படலானார்.

கூரத்தாழ்வாருடன் புறப்பட்ட இராமாநுசர் மூன்று மாதங்களில் காஷ்மீரம் சென்றடைந்தார். சாரதா பீடத்திலுள்ள பண்டிதர்கள் பலருடன் பழகி அவர்களின் அன்பினையும் ஆதரவினையும் பெற்றார். போதாயன விருத்தி என்னும் பெயருடைய நூலைப் பற்றிப் பேச்சு எடுத்தார். இது கேட்டதும் சாரதா பீடப்பண்டிதர்களின் அகமும் முகமும் மாறிவிட்டது.

போதாயன மகரிஷிக்கு நிகரான புலமையுடையவர் என்று இராமாநுசரை அப்பண்டிதர்கள் மதித்தார்கள். எனவே, இந்நூல் இவரிடம் கிடைக்கப்பெற்றால் அத்வைத மதத்துக்கே விரோதியாகி விடுவாரோ என்று அஞ்சினர். எனவே, இந்நூல் செல்லரித்துச் சிதைந்து போயிற்று என்று பொய்யுரை புகன்றனர்.

போதாயன விருத்தி இல்லையென்ற சொல்லைக் கேட்டதும் இராமாநுசர் பெரிதும் சோர்ந்து போனார். பெரிதும் மனங்கலங்கியவாறே அயர்ச்சியால் கண்ணயர்ந்து விட்டார். கனவில் தோன்றிய சரஸ்வதி அந்த நூலை எடுத்து வந்து கொடுத்து "இராமாநுச! இந்தப் போதாயன விருத்தியை எடுத்துக்கொண்டு உடனே இந்த இடத்தை விட்டு ஓடிவிடு. இல்லையேல் உனக்கு ஏதேனும் தீங்கு நேரிடும்!" என்று கூறிய ருளினார்.

சாரதாதேவியை நேரில் தரிசிக்கப்பெற்றதும் தான் நாடி வந்த கிரந்தம் கலைவாணியாலேயே அருளப்பெற்றதும் குறித்து உடையவர் பெரிதும் உவந்தார். சீடர்களுடன் தென் திசையை நோக்கித் திரும்பலானார்

நாள்கள் சில சென்றன. காஷ்மீரச் சாரதா பீடபண்டிதர்கள் நூல நிலையத்திலுள்ள நூல்களைச் சரிபார்த்தனர். அப்போது ஸ்ரீபோதாயன விருத்தி காணப்பெறாமல் பெரிதும் திடுக்கிட்டனர். தெற்கிலிருந்து வந்த இராமாநுசரும் கோவிந்தருமே எடுத்துச் சென்றிருக்கவேண்டும் என்று முடிவுக்கு வந்தனர்.

எனவே, காஷ்மீரப் பண்டிதர்களுள் சிலர் அவர்களைத் தேடிப் புறப்பட்டனர். ஒரு மாத காலத்தில் அவர்களைக் கண்டு பிடித்து அவர்களிடமிருந்து அந்தக் கிரந்தத்தைப் பறித்துச் சென்று விட்டனர்.

கலைவாணியின் அருளால் கிடைக்கப்பெற்ற கிரந்தத்தின் ஒருபகுதியை மட்டுமே இராமாநுசர் கற்றிருந்தார். நூல் முழுவதும் கற்பதற்குள் நூலையே பறிகொடுத்தமை குறித்துச் சொல்லொணாத் துன்பமுற்றார். குருவின் வாட்டங்கண்ட கூரேசர் ஆறுதலாகச் சில சொல்லலுற்றார்.

"ஆச்சார்யரே! தாங்கள் எதற்குக் கவலைப்படுகிறீர்! போதாயன விருத்தி முழுவதையுமே நான் நேற்று இரவுடன் ஒன்றுவிடாமல் மனப்பாடம் செய்துவிட்டேன். அந்த நூல் முழுவதையும் பாரமலேயே என்னால் எழுதித்தர இயலும்" என்று கூரேசர் பணிவுடன் கூறிய பதில் கேட்டு இராமாநுசர் வியப்பும் மகிழ்வும் கொண்டார்.

கூரத்தாழ்வானின் நினைவாற்றலை எண்ணி எண்ணி இராமாநுசர் நெஞ்சம் மகிழ்ந்தார். போதாயன விருத்தி முழுவதையும் அவ்விடத்திலேயே இருந்து எழுதி முடித்துக் கொடுத்தார் கூரேசர்! இழந்த மணியை மீட்டுத்தந்த கூரேசரைக் கட்டியணைத்து இராமாநுசர் மகிழ்ந்து போனார்.

பின்னர், அவ்விடத்திலிருந்தும் புறப்பட்டுத் திருவரங்கம் சென்றடைந்த இராமாநுசர் நடந்தவற்றையெல்லாம் விபரமாகத் தத்தம் சீடர்களுக்கு எடுத்துரைத்தார்.

பின்னர், பிரும்ம சூத்திரத்திற்கு விருத்தியுரை எழுதும் பணியில் இராமாநுசர் முழுவதுமாக ஈடுபட்டார். விளக்கவுரையை இராமாநுசர் சொல்லச் சொல்லக் கூரேசர் அவற்றை எழுதலானார்.

தியானம், உபாசனை, பக்தி ஆகியவற்றின் மூலமே முத்தியடைய முடியும் என்பதே வேத வேதாந்தங்களின் சாரமெனக் கூறி அவருடைய சித்தாந்தத்தை ஸ்ரீபாஷ்யத்தில் உறுதிப் படுத்தினார்.

(தொடரும்)

## பூஜா விதிகள்

திருமாலுக்கு ஊமத்தம்பூவும், எருக்கம் பூவும், அர்ச்சிப்பதற்கு உகந்தது அல்ல. பரமசிவனுக்குத் தாழம்பூ அர்ச்சிப்பது உகந்தது அல்ல. லட்சுமியை தும்பைப் பூவால் அர்ச்சித்தல் கூடாது. பைரவரை மல்லிகைப் பூவினால் அர்ச்சிக்கக் கூடாது. சரஸ்வதியை பவள மல்லிகைப் பூவினால் அர்ச்சிக்கக் கூடாது.

## அரையர் சேவை

நம்மாழ்வாரிடம் தான் உபதேசம் பெற்றுக் கொண்ட நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை பாவ, ராக, தாளத்தோடு தன் மருமகன்கள் கீழையகத்து ஆழ்வான் மற்றும் மேலையகத்து ஆழ்வானுக்கு உபதேசித்தார் ஸ்ரீ நாதமுனிகள். அதுதான் இன்றும் திருவரங்கத்தில் அரையர் சேவை என்ற பெயரில் மிகச் சிறப்பாக நடைபெற்று வரும் வைபவமாகும்.

தொகுத்தவர் : திரு. டி. பூபதிராவ் - சென்னை.

Edited and Published on behalf of T.T. Devasthanams by N.S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press by M. Lakshmana Rao, B.A., L.P.T., Manager, T.T.D. Press, Tirupati - 517 507.

# திருமலையில் தங்குவசதி நன்கொடைத்திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள்புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் நாள்தோறும் திருமலைக்கு வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை-திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்கள், குடில்கள் (காட்டேஜுகள்) விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்குவசதி கட்டிடங்களைக் கட்டியுள்ளது. ஆனால் நாளுக்குநாள் திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை பெருகிவருவதால் திருமலையில் மேலும் பல குடில்கள், விருந்தினர் விடுதிகள், தர்ம சத்திரங்கள் கட்டுவதென தி.தி. தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள்ளது. யாத்திரிகப் பொதுமக்கள் பயனுறும் இப்புதிய தங்குவசதி கட்டிடங்கள் கட்டுவதில் யாத்திரிகர்களும் பங்குபெறும் வகையில் நன்கொடை அளிப்பதில் தனி நபர்கள் மட்டுமன்றி தனியார் நிறுவனங்களும், வர்த்தக அமைப்புகளும் அறக்குழுக்களும் முன்வந்துள்ளன. அவர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தாரின் 'தங்குவசதி நன்கொடை'த் திட்டத்தின்கீழ், பின்வரும் கட்டிட வகைகளுக்கு நன்கொடை அளிக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது.

## குடில்கள்

1) திருமலை கருடாத்ரி நகர் குடில்களின் முதல்தளத்தில் சி, டி பகுதிகள் கட்டுதற்கு அளிக்க வேண்டிய நன்கொடை ரூ. 2,25,000 ஆகும். முதல் தளத்தின் கட்டிட அளவு 883 பரப்படிகளாகும். ஒவ்வொரு குடிலும் இரண்டு பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பகுதியும் (குளியலறைகள் உள்ளடக்கிய) '10 x 10' என்ற அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகளைக் கொண்டு விளங்கும்.

## விருந்தினர் விடுதிகள்

'ஸப்தகிரி சத்திரங்கள்' எனும் கட்டிடங்களில் அலக்நந்தா எனும் ஐந்தாவது கட்டிடத்தில் அறைத்தொகுதி ஒன்று கட்டுதற்கான நன்கொடை ரூ. 1,50,000 ஆகும். இக்கட்டிடத்தொகுதிகள் திருமலையில் குடிநீர் வடிகால் இல்லத்திற்கு அருகே உள்ளன. கட்டப்படும் ஒவ்வொரு அறைத் தொகுதியும் 11.7" x 20.6" அளவு கொண்டதாக விளங்கும். மேலும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளுடன் உள்ளடக்கி விளங்கும் இவ் அறைகளின் மொத்த பரப்பளவு 342 சதுரடிகளாகும். இக்கட்டிடப் பணி ஒரு வருடத்திற்குள் கட்டிமுடிக்கப்படும்.

திருமலை சுராபுரம் தோட்டத்தில் சிறப்புக் குடில்கள். ஒவ்வொரு தளத்திற்கும் நன்கொடைத்தொகை ரூ. 5,00,000 ஆகும். இந்த இடம் திருலைக்கோயிலின் வடகிழக்குப் பகுதியில் ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. ஒவ்வொரு தளமும் 1110 சதுர அடிகள் பரப்பளவுகொண்டு இந்தக் கட்டிடம் விளங்குகிறது. ஒவ்வொரு தளமும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளை உள்ளடக்கி, 12' x 14' அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகள் கொண்டு விளங்கும். இதுதவிர ஒவ்வொன்றும் 12' x 12' என்ற அளவில் கூடிய உணவருந்தும் மற்றும் வரவேற்பு அறைப்பகுதிகளைக் கொண்டு ஓய்வுக்கூடம் ஒன்றுடனும் திகழும். வாகனங்கள் நிறுத்துவதற்கான வசதிகளுடன் கூடிய இக்கட்டிடம் ஒரு வருடத்திற்குள் கட்டப்படும்.

## வழிமுறைகள்

நன்கொடையாளர்கள் ஒரு வெள்ளைத்தாளில், கட்டுதற்கு விருப்பமான குடில்களின் விவரங்களைக் குறிப்பிட்டு, குடில்கள் / அறைத்தொகுதிகள் ஆகியவற்றிற்குச் செலுத்த வேண்டிய நன்கொடைத் தொகையினை, (திருப்பதியில் பெறும் வகையில்) 'Executive Officer, T.T. Devasthanams' எனும் பெயரில் ஒரு தேசிய வங்கி காசோலை மூலமாக பெற்று அதனை "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி-517501" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்தில் அமைதல் நலம். நன்கொடையினை தனிநபரோ/இருவர் இணைந்தோ/தனியார் நிறுவனங்களோ/ வர்த்தக அமைப்புகளோ வழங்கலாம். குடில்கள்/அறைத் தொகுதிகள்/தளங்கள் யாவும் நன்கொடையாளர்களுக்கு வரிசைக்கிரமமாக ஒதுக்கப்படும்.

## நன்கொடையாளர்களுக்கு சலுகைகள்

நன்கொடையாளர்கள் ஒருமுறை தங்கும்போது தொடர்ந்து 10 நாட்களுக்கு மிகாமல், மொத்தத்தில் வருடத்தில் இலவசமாக 60 நாட்களுக்கு தங்கள் தங்குவசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதுபோது அவர்கள் பராமரிப்புக் கட்டணம் மட்டுமே செலுத்துதல் வேண்டும். இந்த வசதியினை தனிநபர் நன்கொடையாளர் மட்டுமே அவர்தம் ஆயுட்காலத்தில் அவரோ, அவரது துணைவியாரோ அல்லது அடுத்த வாரிசுதாரரோ பயன்படுத்திக்கொள்ள முடியும். இருவர் இணைந்தது/தனியார் நிறுவனம்/ வர்த்தக அமைப்பு/அறக்கட்டளை போன்ற நன்கொடையாளர்கள் 20 ஆண்டுகளுக்கு இலவசமாக தங்கள் நன்கொடை தங்கு வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

நன்கொடைகளின் பெயர் மற்றும் ஊர் விவரம் ஒருவர் பெயரில் நினைவுச்சின்னமாக கற்பலகை ஒன்றில் பொறிக்கப்பட்டு நன்கொடை பெறப்பட்ட குடில்களின் முன் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். மேற்படி இக்குடில்கள்/அறைத்தொகுதிகள் போன்றவற்றிற்கு வழங்கப்படும் நன்கொடைத் தொகைகளுக்கு எந்தவிதமான வருமானவரி விலக்கும் அளிக்கப்படமாட்டாது.

செயலாட்சித் தலைவர், திருமலை திருப்பதி தேவஸ்தானம்.

